


# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY.

---

**Monday, 30th January 1961.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at half past eight of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAU) in the Chair.

## I.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

### *Panchayat Courts*

* 241 *Q.*—SRI S. M. ANNAMALAI : *கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) 1960-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 22-ந் தேதியில் 383-ம் எண் கேள்விக்கு அளித்த பதிலையொட்டி பஞ்சாயத்து நீதி மன்றங்களை ஏற்படுத்துவது குறித்து மத்திய சர்க்காரின் முடிவு தெரிவிக்கப்பட்டதா ?*

*(இ) அப்படியானால், அதன் விபரமென்ன ?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The Government of India have constituted a Study Team to go into the question of the composition and functions of Village Courts. The recommendations of this Team are awaited.

(*b*) Does not arise.

SRI S. M. ANNAMALAI : *பஞ்சாயத்து யூனியன் கௌன்சில்கள் ஏற்பட்ட இடங்களில் எல்லாம் சிவில் வழக்குகள், 1958-ம் ஆண்டு சட்டப்படி சிவில் வழக்குகள், வாங்கக்கூடாது என்று இருக்கிறது. அப்படி இருக்கும்போது அந்த வழக்குகளை யார் வாங்குவது, யார் பரிசீலிப்பது என்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்து விட்டார்களா ? அப்படியானால் அதன் விவரம் என்ன ?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : *தனிக் கேள்வி கேட்டால் சொல்கிறேன்.*

SRI S. LAZAR : *இதுவரை இந்தச் சட்டத்தின்கீழ் இயங்கி வரக்கூடிய கிராமாந்திரக் கோர்ட்கள் எப்படி நடந்து கொண்டு வந்திருக்கின்றன ? அதுபற்றிய கருத்து அரசாங்கத்தினிடம் ஏதாவது இருக்கிறதா ?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : *அதைப்பற்றி தனிக் கேள்வி கேட்டால் சொல்கிறேன்.*

[30th January 1961

SRI S. M. ANNAMALAI : இந்த கமிட்டி ரிப்போர்ட் சர்க்காருக்கு கிடைப்பதற்கு முன் 1958-ம் ஆண்டு சட்டம் அமுலுக்கு வந்து விட்டதே, அது பஞ்சாயத்து யூனியன் கௌன்சில் ஏற்பட்ட இடங்களில் அமுலுக்கு வந்து விட்டது. அந்த இடங்களில் வழக்குகளை வாங்கி விசாரிக்க யாருக்கு உத்தரவு இடப்பட்டிருக்கிறது என்பதை கிராமாந்திர மக்கள் தெரிந்து கொள்வதற்கு அதுபற்றி விளக்கமாக சர்க்கார் ஒரு அறிக்கை விடுவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்டடி டீம் என்று சொன்னேன். அவர்கள் பரிசீலனை செய்து சிபார்சுகள் அனுப்பித்தால் இந்தியா பூராவும் ஒரேமாதிரி அமைக்கவேண்டுமென்ற எண்ணமில்லை. அந்தந்த ராஜ்யங்களில் நிலைமை, சட்டம், வழக்கங்கள் இதையெல்லாம் வைத்து அதற்கேற்றபடி மாறுதல் ஏற்படும். மாறுதல்கள் ஏற்படும்போது அப்போதைக்கப்போது மக்களுக்கும் தெரிவிக்கப்படும்.

SRI A. VEDARATHNAM : பஞ்சாயத்து கௌன்சில்களுக்கு இதுவரை இல்லாத அதிகாரங்கள் எல்லாம் நிரம்ப கொடுக்கப்பட்டிருக்கிறது. இதற்கு முன்னிருந்த அதிகாரங்களை, கிரிமினல், சிவில் கேஸ்களை அவர்கள் விசாரிப்பதிலிருந்து அந்த அதிகாரத்தை எடுக்க என்ன முக்கிய காரணம் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கிராம அபிவிருத்தி, கிராம நிர்வாகம் என்பது ஒரு விஷயம். நீதி விசாரித்து நீதி செலுத்துவது வேறு விஷயம் தேர்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்து போர்ட்களுக்கு, அதைக் கொடுப்பது முறையா, திருப்திகரமாக இருக்குமா என்பதைப் பரிசீலனை செய்துதான் முடிவாக ஏற்பாடு செய்யப்பட வேண்டியிருக்கிறது.



*Marketing Committees (staff)*

* 242 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மார்கெட்டிங் கமிட்டி சிப்பந்திகளுக்கு சென்னை சர்க்கார் சம்பள திட்டப்படி சம்பள உயர்வு, மற்ற சலுகைகள் அளிக்கப்பட்டனவா?

(இ) ஆம் என்றால், விவரம் என்ன ?

(உ) இல்லை என்றால், ஏன் ?

(எ) இனிமேல் அமுல்படுத்த உத்தேசமுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No. Sir,

(*b*) Does not arise.

30th January 1961]

(c) The employees of the Market Committees are not Government servants and therefore the question of revising their scales of pay does not come under the purview of the Madras State Pay Commission.

(d) The question of revising the scales of pay for the posts under the Market Committees is under consideration.

### *Express buses*

*243 Q.—SRI P. G. MANICKAM : *கனம் மின்சார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—*

*1960-61-ல் எந்தெந்த மார்க்கங்களிலே எக்ஸ்பிரஸ் பஸ்கள்* (Express Stage carriages) *விடப்படும்?*

THE HON. SRI V. RAMAIAH : A statement [a] containing the particulars is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : *எந்தெந்த இடங்களிலிருந்து எக்ஸ்பிரஸ் பஸ்கள் விடவேண்டுமென்று கோரி பொது மக்களிடமிருந்து அரசாங்கத்திற்கு விண்ணப்பங்கள் அனுப்பப்பட்டன? அதிலிருந்து எந்தெந்த பஸ்கள் விடுவதற்காக அரசாங்கம் திட்டமிட்டிருக்கிறது?*

THE HON. SRI V. RAMAIAH : *தனிக் கேள்வி வேண்டும்.*

SRI T. T. DANIEL : In view of the fact that the Nagercoil-Tiruchirappalli Express Bus and also the Nagercoil-Tuticorin Express bus are very remunerative, will the Government consider the desirability of running Express buses from Nagercoil to Madras and Nagercoil to Tanjore?

THE HON. SRI V. RAMAIAH : A separate question may be put.

SRI S. M. ANNAMALAI : *எந்த அடிப்படையில் துரித பஸ்கள் விடலாம் என்று சர்க்கார் கொள்கை வகுத்திருக்கிறார்கள்? எவ்வளவு தூரம் அவை இருக்க வேண்டுமென்று சர்க்கார் கொள்கை வகுத்திருக்கிறார்கள்? அது அதிக நேரமாகிறது அப்படி அதிக நேரம் ஆவதை மேலும் குறைப்பதற்கு சர்க்கார் முயற்சி எடுத்துக்கொள்வார்களா?*

THE HON. SRI V. RAMAIAH : *துரித பஸ்கள் விடுவதற்கு நம் டிரான்ஸ்போர்ட் அதாரிட்டி எங்கெங்கு விடவேண்டுமென்று கருதுகிறார்களோ அங்கு எல்லாம் விடுவதற்கு முயற்சி எடுத்துச் செய்து கொண்டிருக்கிறார்கள். எத்தனை மைல் குறைந்தபட்சம் இருக்கவேண்டும் என்பதை இதுவரை நிர்ணயம் செய்யவில்லை.*

---

a Printed as Appendix I on pages 130–132 infra.

[30th January 1961

SRI P. G. MANICKAM : சென்னையிலிருந்து கோயம்புத்தூருக்கு எக்ஸ்பிரஸ் பஸ்கள் விடவேண்டுமென்று அரசாங்கத்திற்கு ஏதாவது மனுக்கள் அனுப்பப்பட்டனவா? அப்படி அனுப்பப்பட்டிருப்பின் அவை மீது எடுக்கப்பட்டிருக்கும் நடவடிக்கைகள் யாவை?

THE HON. SRI V. RAMAIAH : தனி கேள்வி வேண்டும்.

SRI K. VINAYAKAM : Will the Government be pleased to introduce Express Buses from Madras to Tirupathi which will enable the passengers to have Darshan at the Hills and return to Madras City the same night?

THE HON. SRI V. RAMAIAH : கனம் அங்கத்தினர் அவர்கள் ஆலோசனையை அரசாங்கத்திற்கு எழுதி அனுப்பி வைத்தால் அது பரிசீலனை செய்யப்படும்.

SRI V. K. KOTHANDARAMAN : அயல் நாட்டு செலாவணி தரக்கூடிய டானரிகள் அதிகப்படியாகயிருக்கும் பேரணும்பட்டிற்கு ரெயில் வசதி ரொம்ப ரொம்ப மோசம். ஆகவேதான் பேரணும்பட்டான் இரண்டான்கெட்டான் என்ற நிலை இருப்பதால், பேரணும்பட்டு—மதராஸ் எக்ஸ்பிரஸ் பஸ் போடவேண்டுமென்று பல மகஜர்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. அவை இதுவரை கவனிக்கப்படவில்லை. அது துரிதமாக கவனிக்கப்படுமா?

THE HON. SRI V. RAMAIAH : ஆரம்பத்தில் சொன்னது போல் எங்கெங்கு அவசியமோ அதை டிரான்ஸ்போர்ட் அத்தாரிட்டி பார்த்து பரிசீலனை செய்து நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அங்கத்தினர் அவர்களின் கோரிக்கையை அரசாங்கத்திற்கு அல்லது டிரான்ஸ்போர்ட் கமிஷனருக்கு எழுதி அனுப்பி வைத்தால் அதையும் பரிசீலனை செய்வார்கள்.

*Holiday Home*

* 244 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to provide 'Holiday Home' for industrial workers; and

(*b*) if so, the amount allotted for the same?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir. The Government have approved a Scheme for construction of a Holiday Home for Industrial Workers at Mahabalipuram.

(*b*) The Government have sanctioned in the first instance an expenditure not exceeding Rs. 64,300 during the current year (1960–61) towards the non-recurring cost involved in the scheme.

30th January 1961]

**Sri N. K. PALANISAMI** : எந்தெந்த தொழில்களைச் சேர்ந்த தொழிலாளர்கள் அதில் சேர்க்கப்படுவார்கள்? அல்லது எல்லாத் தொழிலாளர்களுக்கும் அதில் இடம் தரப்படுமா? இல்லையானால் குறிப்பிட்ட தொழில் செய்யும் தொழிலாளர்களுக்கு மட்டும் அதில் தங்க வசதியிருக்கிறதா?

**The Hon. Sri R. VENKATARAMAN** : பொதுவாக பாக்டரி ஓர்க்கர்ஸ்காக இது ஏற்படுத்தப்படவிருக்கிறது.

**Sri J. MATHA GOWDER** : தொழிலாளர்கள் விடுமுறை இல்லம் குன்னூரில் கட்ட மத்திய அரசாங்கம் சிபார்சு செய்திருக்கிறது என்று கேள்விப்பட்டேன். அது உண்மையா? அப்படியானால் குன்னூரில் கட்ட அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா?

**The Hon. Sri R. VENKATARAMAN** : மத்திய அரசாங்கம் சிபார்சு செய்யவில்லை. நம் அரசாங்கம்தான் அப்படி யோசனை செய்து கொண்டிருக்கிறது. அது இரண்டாவதாக எடுத்துக் கொள்ளப்படலாம்.

**Sri N. K. PALANISAMI** : இதில் தங்கும் தொழிலாளர்களிடமிருந்து ஏதாவது கட்டணம் வசூலிக்கப்படுமா? அல்லது ஆகக்கூடிய செலவை சர்க்காரே ஏற்றுக்கொள்ளுமா?

**The Hon. Sri R. VENKATARAMAN** : இவையெல்லாம் கட்டி முடிந்தவுடன் அல்லது முடியும் சமயத்தில் பரிசீலனை செய்யலாம்.

*Stand-in buses*

* 245 *Q*.—Sri T. S. RAMASWAMI (on behalf of Sri K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there is any proposal to have a fleet of 'Stand-in' buses with standing accommodation to clear passengers during peak hours, and;

(*b*) if so, when it will be given effect to?

The Hon. Sri R. VENKATARAMAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

*Tobacco*

* 246 *Q*.—**Sri S. M. ANNAMALAI** (on behalf of **Sri M. P. SARATHI**) கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் புகையிலை பயிரிடும் முறை, பதனிடும் முறைகள் பற்றிய பயிற்சிக்காக யாழ்ப்பாணத்துக்கு எத்தனை அதிகாரிகள் அனுப்பப்பட்டனர்?

(இ) அவர்கள் எத்தனை நாட்கள் பயிற்சி பெற்றனர்?

[30th January 1961

(உ) அவர்கள் பயிற்சி முடிந்துவிட்டதா?
(எ) அந்தப் பயிற்சியினுல் ஏற்பட்ட பயன்கள் யாவை?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) None, Sir.
(b) to (d) Do not arise.

SRI A. VEDARATHNAM : யாழ்ப்பாணத்தில் இந்த புகையிலையை பாடம் செய்கின்ற முறையை நம்முடைய நாட்டிலும் கொண்டு வருவதற்கு முயற்சி எடுக்கப்படாததின் காரணமாகத் தான் அந்த நாட்டிலிருந்து யாழ்ப்பாணம் இறக்குமதி செய்ய வேண்டியிருக்கிறது. ஆகவே அந்த முறையை இந்த நாட்டில் கொண்டு வந்தால் இறக்குமதியைக் குறைக்கலாமே? அந்தத் துறையில் சர்க்கார் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கீழ் பவானி பிரதேசத்தில் இந்த மாதிரியான யாழ்ப்பாண முறையைக் கையாளலாமா என்பதைப்பற்றி யோசிக்கப்பட்டது. பின்னல் அந்த முறை நமது நாட்டுக்குத் தகுதியாக இருக்காது என்ற முடிவு செய்யப்பட்டது. அதோடு வேறு எந்த முறையைக் கையாண்டால் இதை அபிவிருத்தி செய்யலாம் என்பதைப் பற்றியும் கவனிக்கப்பட்டு வருகிறது.

*Construction of houses*

*247 Q.—SRI M. A. B. ARUMUGHASAMY (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்கு பதிலளிப்பாரா—

(அ) கூட்டுறவு வீடு கட்டும் சங்கங்கள் மூலமாக நமது ராஜ்யத்தில் ஜில்லா வாரியாக 1959-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 1-ந் தேதி முதல் 1960-ம் வருஷம் மார்ச் மாதம் முடிய கட்டிய வீடுகள் எத்தனை?

(இ) ஜில்லாவாரியாக, கடனாகக் கொடுக்கப்பட்ட பணம் எவ்வளவு?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) & (இ) A statement [a] is placed on the table of the House.

SRI M. A. B. ARUMUGHASAMY : ஸார், கிராமாந்திர கூட்டுறவு முறையில் வீடு கட்டும் திட்டத்திற்கு கொடுக்கப்பட்டு வரும் தொகையை இன்னும் உயர்த்திக் கொடுப்பதற்கு அரசாங்கத்திற்கு உத்தேசமிருக்கிறதா?

THE HON. SRI R. VENKATARAMAN : இப்போது இருக்கின்ற முறை பிரகாரம் 50 சதமானம் ராஜ்ய சர்க்காரும், 50 சதமானம் கிராமவாசிகளும் கொடுக்க வேண்டியிருக்கிறது. இதில் கஷ்டம் இருப்பதாகத் தெரிவதால் 50 சதமானத்தில் 30 சதமானத்தை கூட்டுறவு சங்கங்களிலிருந்து கொடுக்க அதிகரிக்கலாம் என்ற விஷயம் சர்க்காரின் யோசனையில் இருக்கிறது.

---

[a] Printed as Appendix II on page 133 infra.

30th January 1961]

*Cinchona Factory*

* 348 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any proposal to convert the Cinchona Factory at Naduvattam (Nilgiris) into a factory for manufacturing medicines; and

(*b*) if so, the details thereof?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI N. K. PALANISAMI : இப்போது சிங்கோனு தொழிலில் நஷ்டம் இருப்பதால் அந்தத் தொழிற்சாலையை மூடிவிட்டு வேறு ஏதாவது மருந்து வகைகள், அல்லது வாசனை திரவியங்கள் உற்பத்தி செய்கின்ற வேலையை ஆரம்பிப்பதற்கு முயற்சி எடுக்கப் படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சிங்கோனு பயிரிடுவதிலோ அந்த தொழிற்சாலையை நடத்துவதிலோ நஷ்டம் இல்லை. இதற்கு முன்பு அதாவது யுத்த காலத்தில் அப்போதிருந்த அரசாங்கம் ஏராளமாக இதில் பணம் செலவு செய்துவிட்டார்கள். அந்தக் கடன் இப்போது நம் தலையில் இருப்பதாக கணக்கில் தெரிகிறது. இருந்தாலும், இப்போதும் நமக்கு கொயினின் தேவையாக இருக்கிறது. ஆகவே அதை அடியோடு நிறுத்திவிடுவதற்கில்லை. இதன் கீழேயே வேறு பல மருந்து செடிகளையும் பயிரிடுவதற்கு மத்திய அரசாங்க ஆராய்ச்சி ஸ்தாபனம் உதவி செய்துவருகிறது. அதனுடைய உதவியுடனும் ஒத்துழைப்புடனும் இம்மாதிரிப்பட்ட பல செடிகள் பயிரிடப்பட்டு வருகின்றன. மேலும் இது விரிவாக்கப்படும்.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த சிங்கோனு நிலங்களில் தேயிலை, காப்பி போன்றவைகளையும் பயிரிடலாம் என்று சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருப்பதற்கு என்ன காரணம்? சிங்கோனு பயிரிடுவதில் நஷ்டமிருப்பதாக சொல்லப்படுவது உண்மையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நஷ்டம் என்று சொல்வதைப்பற்றி நான் இப்போதுதான் விளக்கினேன். ஆனால், சிங்கோனு நமக்கு வேண்டியிருக்கிறது. நமக்கு அதிகமான அளவில் சிங்கோனு கிடைக்கிறது. ஆகவே இதோடு வேறு பல மருந்து செடிகளையும் பயிரிடலாம் என்பதுதான் அரசாங்கத்தின் முடிவு.

[30th January 1961

*Key Village Centres*

* 249 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the number of Key Village Centres and the facilities offered by those centres to the people in the area?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement [a] is placed on the table of the House.

*High Court buildings.*

* 250 *Q.*—SRI M. A. B. ARUMUGHASAMY (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சென்னை ஹைகோர்ட் கட்டிடத்தில் கீரல் விழுந்துள்ளதா ?

(இ) அப்படியானால், அதை பழுதுபார்க்க என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) No, Sir.

(இ) Does not arise.

*Siva temple (Velvimangalam)*

MR. SPEAKER : As the hon. Member who gave notice of question No. 251 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 251 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) Whether the departmental enquiry regarding the alleged irregularities in the Siva temple at Velvimangalam in Perambalur taluk, Tiruchirappalli district, has been completed;

(*b*) if so, the result of the enquiry; and

(*c*) if not, the reasons for the delay?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) & (*c*) The present Chairman of the Board of Trustees has been directed to rectify the defects in the administration of the temple. It is also proposed to take surcharge proceedings against the trustees after the accounts are audited.

***Films***

* 252 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சினிமாப் படங்களின் நீளத்தையும் அவைகளைக் காட்டும் நேரத்தையும் குறைப்பதைக் குறித்து மத்திய சர்க்கார் மாநில சர்க்காரைக் கலந்து ஆலோசித்தார்களா ?

(இ) அப்படியாயின், மாநில சர்க்கார் கூறிய யோசனைகள் என்ன ?

---

Printed as Appendix III on pages 134–135 infra.

30th January 1961]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.
(*b*) Does not arise.

*Beedi Workers.*

* 253 *Q.*—**SRI V. K. KOTHANDARAMAN :** *கனம் கைத் தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்வி களுக்கு பதிலளிப்பாரா—*

*(அ) 1960-ம் வருஷம் அக்டோபர் மாதம் 11-ந் தேதி கனம் அமைச்சர் அவர்களிடம் வடாற்காடு ஜில்லா பீடி தொழிலாளர் சங்கத்தின் சார்பில் பீடி தொழிற்சாலைகள் சட்டத்தின் லைசென்சு பிரிவை அமுல் நடத்துவதில் முதலாளிகள் மறுத்து வருவதையும் காலதாமதம் செய்வதைப் பற்றியும் கொடுத்த மனு மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?*

*(இ) முதலாளிகள் தொழிலாளர்களின் பேரிலே லைசென்சு வாங்குவது சர்க்காருக்குத் தெரியுமா ?*

*(உ) இது விஷயமாக சர்க்கார் எடுத்துக்கொண்ட நடவடிக் கைகள் என்ன ?*

**THE HON. SRI R. VENKATARAMAN :** *(அ) மனுவைப் பரி சீலனை செய்த லேபர் கமிஷனர், பீடி தொழிற்சாலைகள் சட்டத்தின் லைசென்சு பிரிவுகளை அமுல் நடத்துவதை மறுத்தோ அல்லது காலதாமதம் செய்தோ வரும் முதலாளிகளின்மீது தகுந்த நட வடிக்கை எடுக்கும்படி தன் கீழுள்ள அதிகாரிகளுக்கு உத்தரவு விடுத்திருக்கிறார்.*

*(இ) &(உ) இவ்விதமான புகார் சர்க்காருக்கு வரவில்லை.*

**SRI V. K. KOTHANDARAMAN :** *ஸார், லைசென்ஸ் பிரிவை சரியான முறையில் நடத்தவில்லை என்பது மட்டுமல்ல. பழைய படியே பாக்டரிகள் இருந்தும்கூட அவர்கள் காண்டிராக்ட் அடிப் படையில், வேலை குறைவாக கொடுத்து வருவதோடு மட்டுமல்ல, அவர்களுக்கு புகையிலை, இலை முதலியவைகளையும் குறைவாக கொடுத்து கூலியை குறைத்து வருகிறார்கள் என்று தென்னாற் காடு பீடித் தொழிலாளர் சங்கத்திலிருந்து பல மகஜர்கள் வந்திருந்தும் இதுவரை எந்தவிதமான நடவடிக்கையும் எடுக்கப் படவில்லை. ஆகவே, நல்ல முறையில் இந்த லைசென்ஸ் பிரிவை அமுல் நடத்த சர்க்கார் உத்தரவு பிறப்பிக்குமா?*

**THE HON. SRI R. VENKATARAMAN :** *இதில் இரண்டு பிரச்னைகள் இருக்கின்றன. லைசென்ஸ் பிரிவு சரியாக அமல் நடத்த வில்லை என்று சொன்னால், அதைப்பற்றி ராஜ்ய சர்க்கார் கீழ் அதிகாரிகளுக்கு நல்ல முறையில் அமல் நடத்தும்படி உத்தர விட்டிருக்கிறது. தொழிலாளர்களுக்கு முதலாளிகளால் கூலி குறைவாகக் கொடுக்கப்பட்டு வருகிறது என்று சொன்னால் அது தொழில் தகராறு சம்பந்தமானது. இதற்காக கன்ஸிலியேஷன் நடத்தவேண்டும். இம்மாதிரிப்பட்ட தொழில் தகராறு வந்தால் உடனடியாக சர்க்காரோ அல்லது மந்திரியோ நடவடிக்கை எடுத்துக்கொள்ளமுடியாது. லேபர் ஆபீஸர் இதற்கான நடவடிக் கைகளை எடுத்துக்கொள்வார்.*

SRI V. K. KOTHANDARAMAN : *1944-வது வருஷத்திய மத்திய சர்க்கார் சட்டப்படி பீடி தயாரிப்பதற்காக (கொடுக்கக் கூடிய) புகையிலை லைசன்ஸ் எல். 2, எல். 5 என்ற லைசன்ஸ்கள் கொடுக்கப்படும். இதற்கு மத்திய சர்க்கார் ராஜ்ய சர்க்காருடைய அனுமதியைக் கேட்டுத்தான் கொடுக்கிறார்கள். ஆகவே இது போன்ற லைசன்ஸ் கொடுக்கும்போது விதிகளை மீறக்கூடிய விவரங் களைப்பற்றி மத்திய சர்க்காருக்கு ராஜ்ய சர்க்கார் தெரியப்படுத்தி யிருக்கிறார்களா ? இல்லையென்றால் இனிமேலாவது இவ்விதம் தெரிவிக்க முன் வருவார்களா ?*

THE HON. SRI R. VENKATARAMAN : *கனம் அங்கத்தினர் அவர்கள் தகவல்கள்தான் கொடுக்கிறார், கேள்வி கேட்கவில்லை. இம்மாதிரிப்பட்ட லைசன்ஸ்கள் கொடுப்பது மத்திய சர்க்காருடைய பொறுப்பிலுள்ளது. ராஜ்ய சர்க்காருக்கு இதில் எந்தவிதமான பொறுப்பும் கிடையாது.*

SRI K. ANBAZHAGAN : *தலைவர் அவர்களே, பீடித் தொழி லாளர்களுக்கு கூலி கொடுப்பதிலே, அவர்களை ஏமாற்றக்கூடிய முறையில், லைசன்ஸ் பெறுவதற்காக கம்பெனிகளின் பெயரை மாற்றிச் சொல்லக்கூடிய பல தவறுகள் நடைபெற்று வருகின்றன என்பதை அமைச்சர் அவர்கள் அறிவார்களா ? அப்படியாயின் அத்தவறுகளை நீக்குவதற்கு அரசாங்கம் என்ன வகையான நட வடிக்கை எடுத்திருக்கிறது ?*

THE HON. SRI R. VENKATARAMAN : *என்ன தவறு ஏற்பட் டிருக்கிறது என்பதில் ஒன்றை எடுத்துச்சொன்னால் என்னால் பதில் சொல்லமுடியும். பொதுவாக தவறுகள் என்று சொன்னால் பதில் சொல்லுவது மிகவும் கஷ்டம்.*

SRI M. P. SARATHI : *அமைச்சர் அவர்கள் ஒரு தவறை காண்பிக்கும்படி சொன்னார்கள். நான் சொல்லுகிறேன், வேலூரில் ரூ. 1-11-0 கூலி கொடுக்க வேண்டும் என்று சொல்லி யிருந்தும் ரூ. 1-4-0 கொடுத்து வேலை கொடுத்துக்கொண்டிருக்கிறார் கள். இதைப்பற்றி அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுக்கும் ?*

THE HON. SRI R. VENKATARAMAN : *கனம் அங்கத்தினர் திரு. கோதண்டராமன் அவர்களுடைய கேள்விக்குப் பதில் சொல்லுகின்றபோது இதைப்பற்றி சொன்னேன். இது தொழில் தகராறு சம்பந்தமானது, இம்மாதிரி தொழில் தகராறு ஏற்பட்ட வுடன் சட்டப்படி லேபர் கமிஷனரிடத்தில் புகார் செய்ய வேண்டும். அம்மாதிரி புகார் செய்தால் உடனடியாக நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்படும் என்பதைத் தெரிவித்துக்கொள்கிறேன்.*

*Poultry*

* 254 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the number of Poultry Farms to which the Government give grants and loans?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement [a] is placed on the table of the House.

---

a Printed as Appendix IV on page 135 infra.

30th January 1961]

SRI V. SUBBIAH : ஸார், கோவில்பட்டியில் சமுதாய நலத் திட்டத்தின்கீழ் ஆரம்பிக்கப்பட்ட கோழிப்பண்ணையில் நோய் வந்ததின் காரணமாக நஷ்டம் ஏற்பட்டு அந்த கோழிப்பண்ணையே மூடப்பட்டு விட்டது. இவ்விதம் நோய்வராமல் பாதுகாப்பதற்கு அரசாங்கம் நடவடிக்கை எடுத்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப்பற்றி அப் போதைக்கப்போது பரிசீலனை செய்யப்பட்டு நடவடிக்கை எடுத்துக்கொள்ளப்பட்டு வருகிறது.

SRI A. VEDARATHNAM : தஞ்சை ஜில்லாவில் ஆலத்தம் பாடி என்ற இடத்தில் ஒரு கோழிப்பண்ணை ஆரம்பிக்க அரசாங்கம் உத்தேசித்திருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி என் னிடம் தகவல் இல்லை.

*Compost manufacture (training)*

* 255 Q.—SRI M. P. SARATHI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) கம்போஸ்ட் உரம் தயாரிப்பு பயிற்சி பெற எத்தனை அதிகாரிகள் வெளிராஜ்யங்களுக்கு, (ii) டெல்லிக்கு ; (iii) வெளிநாடுகளுக்கு அனுப்பப்பட்டனர் ?

(இ) எவ்வளவு காலப் பயிற்சி ?

(உ) பயிற்சிபெற அனுப்பப்பட்ட அதிகாரிகள் கெஜட் பதிவுள்ளவர்களா (Gazetted)? இல்லாதவர்களா (Non-Gazetted)?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*), (*b*) & (*c*) Four Gazetted Officers of the Agriculture Department were sent for training in compost manufacture at Delhi during 1957. The duration of the training was two weeks.

SRI M. P. SARATHI : இதற்கு மத்திய சர்க்காரிடமிருந்து ஏதாவது உதவி கிடைக்கின்றதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : மத்திய சர்க்காரி லிருந்து உதவி கிடைக்கும்.

SRI V. K. KOTHANDARAMAN : இம்மாதிரியான கம்போஸ்ட் உரம் நல்ல முறையில் தயார் செய்வதற்காக நம் ராஜ்யத்தில் எத்தனை பஞ்சாயத்து போர்டுகள், எத்தனை நகரசபைகள் இவை களுக்கு வெகுமதி அளிக்கப்பட்டது என்பதை சொல்லமுடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அந்தத் தகவல் என்னிடமில்லை.

[30th January 1961

*Bridge (Pazhayar)*

* 256 *Q.*—Sri M. A. B. ARUMUGHASAMY (on behalf of Sri K. SATTANATHA KARAYALAR) : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) whether there is any proposal to construct a bridge over Pazhayar in Thamaraikulam, Kanyakumari district; and

(*b*) if so, when it will be taken up?

The Hon. Sri P. KAKKAN : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

Sri T. S. RAMASWAMI : May I know whether any estimate was prepared to construct a bridge over Pazhayar some years back and if so whether the Government would consider the possibility of constructing a bridge there?

The Hon. Sri P. KAKKAN : There was a proposal. The cost of the project work is reported to be Rs. 10 lakhs. The Chief Engineer has reported that if the Government considered it necessary to take up the work, it could be included in the Third Plan as an additional item under 'Part II-B works' in Kanyakumari district.

*Cambodia cotton*

* 257. *Q.*—Sri M. A. B. ARUMUGHASAMY (on behalf of Sri N. R. THIAGARAJAN) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப் பாரா—

(அ) கம்போடியா பருத்தி காலமெல்லாம் பயிர் செய்வதால் பருத்தி உற்பத்தி பாழ்பட்டு பூச்சி புழுக்கள் உற்பத்தி அதிக மாவதை சர்க்கார் அறியுமா?

(இ) ஒரு குறிப்பிட்ட காலத்தில் செடியை அழித்துவிட உத்தேசம் உண்டா?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) Yes.

(*b*) Under the provisions of the Pest Act, 1919, as subsequently amended, it is made obligatory on the part of the farmers to pull out the plants from the ground before the stipulated date and if they do not pull out the crop before the stipulated date, the Agricultural Department can see that the crops are removed from the ground and the cost recovered as arrears of land revenue.

30th January 1961]

*Poormen's depots (Uthamapalayam).*

* 258 *Q.*—SRI M. A. B. ARUMUGHASAMY (on behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

மதுரை ஜில்லா உத்தமபாளையத்தில் ஏழைகள் உணவு, பண்டகசாலைப் பணம் முதலியன ஹைஸ்கூல் கமிட்டித் தலைவர் காலஞ்சென்ற திரு. எஸ். தியாகராஜ முதலியார் பேரில் இருந்தது என்னவாயிற்று ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : At the time when the Poormen's Depots at Uthamapalayam were closed, there was a balance of about Rs. 3,007. This amount together with the interest thereon which totalled up to a sum of Rs. 4,800 was placed in a fixed deposit account in the Uthamapalayam Urban Bank at 4½ per cent interest. The Poormen's Depot Committee of Uthamapalayam has resolved at its meeting held on 18th November 1960, to utilize the amount of Rs. 5,017·34 nP. being the deposit amount and the interest thereon for the construction of a building for the District Board Higher Elementary Girls School at Uthamapalayam.

*Long-term prisoners*

* 259 *Q.*—SRI M. A. B. ARUMUGHASAMY (on behalf of SRI N. R. THIAGARAJAN ): கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்கு பதிலளிப்பாரா—

நம் மாநிலத்தில் நீண்ட நாள் தண்டனையடைந்த கைதிகளுக்கு என்ன வேலை கொடுக்கப்படுகிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Prisoners sentenced to long-term imprisonment are trained in Tailoring, Aluminium and Blacksmithy work, Spinning, Weaving, Boot-making, Carpentry, Book-binding, (Handmade) Paper making and Composing in Printing press. These convicts are also employed on gardening. cooking, petty constructions and repairs and as night watchmen, work overseers and convict warders.

*S.T. Hindu College, Nagercoil*

* 250 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether any representations have been received by the Government regarding the withdrawal of a case in connection with an alleged misappropriation of S.T. Hindu College Funds

[30th January 1961

pending in the Nagercoil District Magistrate's Court; and for the stay of further investigations of similar cases connected with the funds of the same Institution;

(b) if so, from whom and on what grounds; and

(c) the steps taken by the Government on this matter?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (a) Yes, Sir.

(b) From Sri T. Perumal Pillai agreeing to pay the amount for which he may be found liable after audit during his period of office.

(c) The petitioner's request has been rejected.

SRI T. S. RAMASWAMI: May I know whether the petitioner agreed to deposit the amount alleged to be misappropriated?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: I have already read the answer.

*Growth of plants (music)*

* 261 Q.—SRI M. A. B. ARUMUGHASAMY (on behalf of SRI K. SATTANATHA KARAYALAR): Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to do experiments to find out the effect of music on the growth of plants?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir.

SRI A. VEDARATHNAM: *அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் இசையின் மூலம் விவசாய அபிவிருத்திக்கு ஆராய்ச்சி நடந்து, அது நல்லமுறையில் நடப்பதாகவும் கருதப்படுகிறது. ஆகவே, அரசாங்கம் அதைப்பற்றி நிபுணர்களைக் கொண்டு பரிசீலனை செய்து, அதைப்பற்றி ஒரு அறிக்கை வெளியிட முன்வருமா என்று கேட்க விரும்புகிறேன்.*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: *எனக்கு வந்த தகவலிலே அங்கு இன்னும் பரிட்சார்த்தமாகத்தான் நடைபெறுகின்றதே தவிர, முடிவு ஒன்றும் தெரியவில்லை. முடிவு தெரிந்த பிறகு நம்முடைய நிபுணர்கள் அதைப் பற்றியெல்லாம் பரிசீலனை செய்வார்கள்.*

SRI M. R. KANDASWAMI MUDALIAR: *சார், இந்த இசை மூலம் பயிர்களும், செடிகளும் வளர்ச்சி அடைவது விஞ்ஞானத்தில் பெயர்பெற்ற எந்த நாட்டிலாவது அனுபவத்திலுள்ளதா அல்லது இப்போது நம்முடைய தேசத்தில் பொதுவாக அதைப் பரிசீலனைக்கு மேற்கொள்ளப்பட்டிருக்கிறதா ?*

THE HON. SRI M. BHAKTAVATSALAM: *இதைப் பற்றியெல்லாம் விவரங்கள் என்னிடம் இல்லை.*

30th January 1961]

Sri K. VINAYAKAM : Is it a fact that plants have a tendency to grow well under the influence of traditional Carnatic music but refuse to grow under the influence of cheap cinema music based upon the South American tunes?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : I have only this information on the subject, viz., that the Annamalai University had been making experiments on the effect of music on plants.

*Meenakshi Sundareswarar temple, Madurai*

*** 262 Q.**—Sri M. A. B. ARUMUGASWAMY (on behalf of Sri N. R. THIAGARAJAN) : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) மதுரை மீனாட்சியம்மன் கோவிலும், கோபுரங்களும் புதுப்பித்து கும்பாபிஷேகம் நடைபெற இருக்கிறதா?

(இ) இதற்காக பொது மக்களிடம் நன்கொடை வசூலிக்கப் படுகிறதா?

(உ) இதற்கென உத்தியோகஸ்தர் நியமிக்கப்பட்டுள்ளாரா?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (அ) Yes, Sir.

(இ) Yes, Sir.

(உ) Sri Meenakshi Sundareswarar Temple Renovation Committee has appointed a Retired Assistant Commissioner of the Hindu Religious and Charitable Endowments (Administration) Department as Special Officer for the Tiruppani work.

*Government cases in courts*

*** 263 Q.**—Sri S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) பைசலாகாமல் இருக்கும் சர்க்கார் வழக்குகளை பரிசீலிப்பதற்காக கமிட்டி ஒன்றை நியமிக்கும் உத்தேசம் உண்டா?

(இ) அப்படியாயின், அதன் விவரமென்ன?

(உ) 1960-ல் எத்தனை வழக்குகள் முடிவு பெறாமல் இருக்கின்றன?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.

(*c*) The public interest served by answering the question would not be commensurate with the time and labour involved in collecting the particulars for the answer.

[30th January 1961

SRI S. M. ANNAMALAI : ஸார், சர்க்கார் வழக்குகள் பைசல் ஆகாமல், ஆண்டுக்கு ஆண்டு அதிகமாகிக் கொண்டு வருகிறது என்று அறிக்கையைப் பார்த்தால தெரிகிறது. ஆகவே, இதை சர்க்கார் பரிசிலனை செய்வார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அது உண்மையல்ல ; சரியல்ல.

SRI V. K. KOTHANDARAMAN : துரிதமாகப் பைசல் செய்வதற்கு வேண்டி, நீதி மன்றங்களை அதிகப்படுத்தும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எப்போது அவசியம் ஏற்படுகின்றதோ, அப்போதெல்லாம் நீதி மன்றங்கள் அதிகப் படுத்தப்பட்டு வருகின்றன. மொத்தத்திலே பார்க்கும் போது வழக்குகளின் முடிவு துரிதமாக நடந்துகொண்டுதான் வருகிறது.

*Harijan cultivators*

* 264 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Works be pleased to state the number of pairs of bulls supplied to Harijan cultivators district-war for the last three years?

THE HON. SRI P. KAKKAN : A statement [a] is placed on the Table of the House.

SRI T. S. RAMASWAMI : 1957-58, 1958-59-ல் கன்யாகுமரி ஜில்லாவிற்கு மட்டும் இந்த எருதுகள் கொடுப்பது குறைந்திருப்பதன் காரணம் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : ஜனத்தொகையைப் பொறுத்துத் தான் இது கொடுக்கப்படுகிறது. அங்கு ஜனத்தொகை குறைவாக இருக்கிறது.

SRI J. MATHA GOWDER : ஸார், நீலகிரி ஜில்லாவிலே உள்ள ஹரிஜன மக்களுக்கு விவசாயத்திற்கு எருதுகள் வைத்து அங்கு உழவு நடத்த லாயக்கில்லையாகையால், பயிரிடுவதற்கு லாயக்கான விவசாயக் கருவிகளை அவர்களுக்கு கொடுத்துதவ அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI P. KAKKAN : இதுவரை அரசாங்கத்திலே இந்த ஏற்பாடு செய்யப்படவில்லை. இருந்தாலும், கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்வதால் இதையும் பரிசீலனை செய்து பார்க்கலாம்.

---

a Printed as Appendix V on page 136 infra.

30th January 1961]

SRI P. G. MANICKAM : ஸார், மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்திலே ஹரிஜன விவசாயிகளுக்கு பயிர் செய்வதற்கு பசு மாடுகளும், எருதுகளும் இலவசமாக வாங்கிக்கொடுத்து உதவுவது பற்றி அரசாங்கம் ஏதாவது ஏற்பாடுகள் செய்யுமா? அல்லது பரிசிலனையாவது செய்யப்படுமா என்று அறிய விரும்பு கிறேன்.

THE HON. SRI P. KAKKAN : விவசாயம் செய்வதற்கு பசு மாடுகள் வாங்கிக் கொடுக்கும் உத்தேசம் சர்க்காருக்கு இல்லை. எருதுகள் வாங்கிக் கொடுப்பது என்பதுதான் சர்க்காருடைய கொள்கை. அதன்படிதான் காளை மாடுகள் வாங்கிக் கொடுக்கப் படுகின்றன. கூட்டுறவு சொஸைடி, போன்றவை அமைக்கப் பட்டால், அப்போது பசு மாடுகள் வாங்கிக் கொடுக்க ஊக்கம் அளிக்கப்படும்.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : தலைவர் அவர் களே, பெண்களை பிற்பட்ட சமூகத்தினராகக் கருதி ஹரிஜன மக்களுக்கு கொடுக்கப்படும் சலுகைகள் எல்லாம் கொடுக்கப் பட்டு, அதன்படி பசு மாடுகள் வாங்கிக் கொடுக்கப்படுமா?

THE HON. SRI P. KAKKAN : ஹரிஜனப் பெண்கள் விண்ணப் பித்துக் கொண்டால் அவர்களுக்கும் கொடுக்கப்படும்.

SRI V. SUBBIAH : ஸார், ஹரிஜனங்களுக்கு மாடு வாங்கிக் கொடுக்க வேண்டி ஒதுக்கிய தொகை மிகவும் குறைவாக இருக் கிறது. இப்போது விவசாயத்திற்கு நல்லமுறையிலே உழவு மாடு கள் வேண்டுமென்றால், ஆயிரக்கணக்கான ரூபாய் போட்டு வாங்க வேண்டி இருக்கிறது. இப்படி ரொம்பவும் குறைந்த தொகையின் மூலம் நல்ல மாடுகளை வாங்க முடியாது. மேலும், அப்படி வாங்கப்படும் மாடுகள் விவசாயத்திலே அனுபவமுள்ள முக்கியஸ் தர்களைக் கொண்டு சந்தைக்குச் சென்று தேர்ந்தெடுக்கப்படு வதில்லை என்று நினைக்கிறேன். இப்போது நடைமுறையிலே ஆபீசர்கள் மாடுகள் வாங்குவதிலே பல தவறுகள் நடப்பதாக கேள்விப்படுகிறேன். அப்படிப்பட்ட நிலைமை ஏற்படாதபடிக்கு இதைக் கவனிக்க ஒரு போர்டு மாதிரி ஒரு குழு ஆரம்பிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

MR. SPEAKER : சஜஷன் சொல்கிறார்.

SRI S. SADASIVAM : எங்கள் பகுதியிலே காளை மாடுகள் வாங்கி உபயோகிப்பதைவிட பசு மாடுகள் அதிகமாக உழவுக்கு உபயோகிக்கிறார்கள். காங்கேயம் பசு மாடு காளை மாடுகளைவிட விவசாயிக்கு நல்லமுறையிலே பயன்படுவதால், அங்குள்ள பெரிய விவசாயிகள்கூட பசு மாடுகளைத்தான் உழவுக்கு உபயோகப்படுத்துகிறார்கள். இதை உணர்ந்து ஹரிஜனங் களுக்கும் காளை மாடுகளுக்குப் பதில், பசு மாடுகள் வாங்கிக் கொடுக்கப்படுமா?

THE HON. SRI P. KAKKAN : காளை மாடுகள் வாங்கிக் கொடுப்பது என்பதுதான் சர்க்காருடைய கொள்கை. பசு மாடுகள் லாயக்கான நிலைமையில் இல்லை என்று கருதப்படுகிறது.

[30th January 1961

SRI T. S. RAMASWAMI : ஹரிஜனப் பெண்கள் விவசாயத்திற்கு மாடுகள் வேண்டுமென்று விண்ணப்பம் செய்து கொள்ளப்பட்டால், அவர்களுக்கு வாங்கிக் கொடுப்பதில்லை என்று சொல்லப்படுகிறது. ஹரிஜனப் பெண்களுக்கும் அம் மாதிரி கொடுக்க வசதி செய்யப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : மாடு வாங்க கடனுதவி கேட்டு வரக்கூடிய விண்ணப்பங்களையெல்லாம் ஒன்று சேர்த்து, சீட்டுக் குலுக்கிப் போட்டு யார் யாருக்கு சீட்டு விழுகிறதோ அவர்களுக் கெல்லாம் மாடு வாங்கிக் கொடுக்கப்படுகிறது. அந்த முறையிலே ஆண்கள் இல்லாத பெண்கள் மாடு வேண்டுமென்று விண்ணப்பம் போட்டால், அவர்களுக்கும் இந்த முறையில் மாடு கொடுக்கப் படும்.

9-00 a.m. SRI A. GOVINDASAMY : இந்த மாடுகள் தருவது மக்கள் சொந்தத்தில் நிலம் வைத்துக் கொண்டிருந்தால்தான் கொடுக்கப் படுகின்றது. சொந்தத்தில் நிலமில்லாமல் குத்தகைக்குப் பயிரிடு பவர்களுகக்குக் கொடுக்கப்படுவதில்லை. ஆகையால், குறிப்பிட்ட ஏக்கர் நிலத்தை குத்தகைக்குப் பயிரிட்டாலும் அவர்களுக்கும் வழங்க அரசாங்கம் வழிவகை செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : சொந்தத்தில் நிலம் வைத்திருப் பவர்கள் மாத்திரமல்லாமல் குத்தகைக்கு வைத்துக்கொண்டிருந் தாலும் கொடுத்திருக்கிறார்கள்.

*Agriculture Department*

* 265 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விவசாய இலாகாவை சீரமைக்க வேண்டுமென்று, திட்டக் கமிஷன் மாநில சர்க்காருக்கு ஆலோசனை கூறியுள்ளதா ?

(இ) அப்படியானால், அதன் விவரமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) The answer is in the negative.

(b) Does not arise.

SRI S. M. ANNAMALAI : ஸார், இந்த விவசாய இலாகாவை அகில இந்திய சர்வீசாக மாற்றவேண்டுமென்று மத்திய சர்க்கார் ஏதாகிலும் மாநில சர்க்காரை ஆலோசனை கேட்டார்களா ? அதற்கு மாநில சர்க்கார் சொல்லிய பதில் என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ராஜ்ய விவசாய அமைச்சர்கள் மாநாட்டிலே இந்த யோசனை கூறப்பட்டது. ஆனால் ராஜ்ய விவசாய அமைச்சர்கள் இதை ஏற்றுக்கொள்ள வில்லை. இந்த அரசாங்கமும் அதை ஏற்றுக்கொள்ளவில்லை.

30th January 1961]

Sri V. K. RAMASWAMY MUDALIYAR : May I know the reasons for not taking up the proposal especially in view of the fact that there is a widespread feeling that the entire Department should be re-organised and the top-ranking officers do not have personal contacts with the villagers and have contacts with them only through the officers at the lower level?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : Sir, to the extent the Department has to be re-organised, it has been attended to now and then. But, the Government do feel that there is no need for making the Agricultural Service as an All India Service as that would lead to unnecessary interference from other quarters.

*Fair-price shops.*

*266 *Q.*—Sri S. M. ANNAMALAI :
Sri K. SATTANATHA KARAYALAR :
Sri T. T. DANIEL :
Sri M. P. SARATHI :
} கனம்

உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1960-ல் நியாயவிலைக் கடைகள் எந்தெந்த மாவட்டங்களில் எத்தனை திறக்கப்படும்?

(இ) அவைகளின்மூலம் எப்படி, என்ன விலைக்கு விற்கப்படும்?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) The Government have authorised the opening of Fair Price Shops up to a maximum of 776 shops for the State as a whole for the current season. The Districtwise breakup is as follows :—

| | |
|---|---|
| Madras 150. | Coimbatore 70. |
| Chingleput 60. | Madurai 60. |
| North Arcot 50. | Ramanathapuram 70. |
| South Arcot 40. | Tirunelveli 60. |
| Thanjavur 50. | Kanyakumari 20. |
| Tiruchirappalli 60. | The Nilgiris 35. |
| Salem 51. | Total 776. |

(*b*) Rice is being issued through each Fair Price Shop at one Madras Measure per head per day, subject to a maximum of 15 bags per shop per day in Madras City and a maximum of 10 bags per shop per day in mufassal. The retail price of rice is round about 0·75 nP. per Madras Measure and varies slightly from district to district.

[30th January 1961

SRI S. M. ANNAMALAI : ஸார். இந்த நியாய விலைக் கடைகளை அதிகமாகத் திறந்து அதிக அரிசி கொடுத்தால் இப்போது ஏறிய விலையைக் குறைக்கலாம். இப்போது மார்க்கெட்டில் சென்று அரிசி கேட்டால் நியாய விலைக் கடைகளில் விற்கும் விலையைவிட அதிகமாகச் சொல்லப்படுகிறது. இப்படி விலையானது விஷம் போல் ஏறுமல் இருப்பதற்காக நியாய விலைக் கடைகளை மேலும் திறக்க அரசாங்கம் முன் வருமா? இப்போது நபர் ஒன்றுக்கு 1 படி கொடுப்பது என்றிருப்பதை 2 படியாகக் கொடுக்க சர்க்கார் முன் வருவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நியாய விலைக் கடைகள் திறந்து வைப்பதாவது அவசியமான இடங்களில் நிவாரணம் அளிக்கவேண்டும்—அதுவும் ஏழைகளுக்கு நிவாரணம் அளிக்கவேண்டும்—என்ற நோக்கத்தோடுதான் திறக்கப்படுகின்றன. அதிகமாக நியாய விலைக்கடைகள் திறக்கப் படவேண்டிய அவசியமில்லை. எங்கெங்கு திறக்க வேண்டிய நிமித்தம் ஏற்படுகின்றதோ அங்கெல்லாம் திறக்கப்படுகின்றன. நேற்று மாலை நான் வட ஆற்காடு மாவட்ட கலெக்டரோடு பேசிக் கொண்டிருந்தேன். நியாய விலைக் கடைகள் இருக்கின்றன, அதோடு விலைகள் குறைந்துகொண்டிருக்கின்றன என்று சொன்னார்கள்.

SRI T. T. DANIEL : May I know the quality of rice available in Fair Price Shops and whether any difficulty has been experienced by the public in purchasing the rice from the Fair Price Shops?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, I cannot describe the quality of rice. If only the hon. Member takes some care and trouble to visit the Fair Price Shops he can see for himself the quality of rice that is supplied there. As I have already stated, there are 150 Fair Price Shops in Madras city.

SRI S. M. ANNAMALAI : ஸார், அமைச்சர் அவர்கள் பதில் சொல்லுகின்றபோது வட ஆற்காடு மாவட்ட கலெக்டரைச் சந்தித்துப் பேசியபோது விலைகள் குறைந்து வருகிறது என்று அவர் கூறியதாகச் சொன்னார்கள். இப்போது நியாய விலைக் கடைகளில் விற்கும் விலையைவிடக் குறைவாக இருக்கிறதா? மார்க்கெட்டில் இருக்கும் விலை என்ன என்று கேட்டார்களா? சென்ற மாதம் என்ன விலை இருந்தது. சென்ற ஆண்டு என்ன விலை இருந்தது என்று கேட்டார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நியாய விலைக் கடைகளில் விற்பதைவிடக் குறைந்திருக்கிறது என்று நான் சொல்லவில்லை. அவர்களும் குறைந்திருக்கிறது என்றுதான் சொன்னார்கள். எதைவிடக் குறைந்திருக்கிறது என்று சொல்ல வில்லை.

30th January 1961]

SRI K. ANBHAZHAGAN : நியாய விலைக் கடைகளில் ஏறத் தாழ இரண்டு மணி முதல் மூன்று மணி அளவு வரையில் 400 முதல் 500 பேர்கள் வரையில் காத்துக்கொண்டிருக்கின்ற நிலைமையை மாற்ற அரசாங்கம் ஏதாவது வழிவகை செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதை மாற்ற முற் பட்டால் கள்ள மார்க்கெட் நிலைமைதான் ஏற்படலாம்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : இப்போது ஸ்டாக்கில் வைத்திருக்கக்கூடிய நியாய விலைக் கடை அரிசி பார்வைக்கு நல்ல முறையில் இருந்தாலும், சமைக்கும்போது ஒரு வாடை வருகிறது. இதைப்பற்றி எற்கனவே அமைச்சரிடத்திலும் சொல்லியிருக்கிறோம். அந்த மாதிரி புகார் வந்திருக்கிறதா ? இன்னும் இந்த அரிசியை வைத்துக் கெட்டுப் போவதைக் காட்டிலும் அதை விற்று விட்டு புதிதாக ஸ்டாக் செய்வது நல்ல தல்லவா ? அதற்கான முறையில் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : புகார்கள் என்னி டம் ஒன்றும் வரவில்லை. மேலும் இது சென்னை அரசாங்கத்தின் ஸ்டாக் இல்லை. மத்திய சர்க்கார் வைத்திருக்கக்கூடிய ஸ்டாக் கிலிருந்து வாங்கிக் கொடுக்கப்படுகின்றது. மேலும் கெட்டுப் போகாமல் இருப்பதைப்பற்றி மத்திய சர்க்கார் வேண்டிய நட வடிக்கைகளை எடுத்துக்கொள்வார்கள். அது இந்த அரசாங்கத் தின் பிரச்னை இல்லை.

SRI A. GOVINDASAMY : நியாய விலைக் கடைகளில் பொதுமக்கள் அரிசி கேட்கின்ற காலத்தில் சர்க்கரை ரேஷன் கார்டைக் கொண்டு வரவேண்டுமென்று சொல்லுகின்றார்கள். சர்க்கரை ரேஷன் கார்டு ஏழைகளுக்கு வழங்கப்படவில்லை. ஆகையால், இனிமேல் சர்க்கரை ரேஷன் கார்டைக் கொண்டு வரவேண்டும் என்று சொல்லும் முறையை மாற்றுவதற்கு சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அம்மாதிரி என் னிடம் தகவல் இல்லை. கனம் அங்கத்தினர் அவர்கள் எந்த நியாய விலைக் கடையில் இம்மாதிரி கேட்கிறார்கள் என்று குறிப்பிட்டு எழுதியனுப்பினால், அதற்கு வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்ளலாம்.

SRI J. MATHA GOWDER : நீலகிரி ஜில்லாவில் நெல் சாகுபடி மிகவும் குறைவாக இருக்கிறது. வெளி ஜில்லாக்களி லிருந்துதான் அரிசி வரவேண்டிய நிர்ப்பந்தம் இருக்கின்ற காரணத்தினால்—இப்போது 35 கடைகள் திறந்திருக்கின்றதாகச் சொன்னார்கள். இது குறைவாக இருப்பதால்—மேலும் அதிக மாகத் திறக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நீலகிரி ஜில்லா விற்கு 35 என்று சொன்னால் நீலகிரிக்கு பிரத்தியேகமாக கவனம் செலுத்தி கொடுத்திருக்கிறோம் என்று கனம் அங்கத்தினர்கள் உணர்வார்கள்.

[30th January 1961

SRI V. K. KOTHANDARAMAN: ஸார், வட ஆற்காடு ஜில்லாவில் அறுவடையான காலத்தில் விலை காலணு, அரைபணு குறைந்து, பிறகு ஒரு அணுவிற்கு மேல் ஏறியிருக்கிறது. அப்போது காலணு குறைந்ததை வைத்துக்கொண்டு குறைந்திருக்கிறது என்று சொல்லியிருக்கிருர்கள். இதைப் பரிசீலனை செய்து மேலும் அதிகப்படியான நியாய விலைக் கடைகளைத் திறக்க அமைச்சர் அவர்கள் ஏற்பாடு செய்வார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: கனம் அங்கத்தினர் மன்றக் கூட்டம் முடிந்த பிறகு போய் கலெக்டரைப் பார்த்து இதையெல்லாம் பற்றிப் பேசலாம்.

SRI K. VINAYAKAM: Sir, is it a fact that the Government have issued orders to the Collectors to close the Fair Price Shops by the end of this month? If so, will the Government consider the possibility of retaining the shops at least for one or two months more, especially in te dry area of Tiruttani taluk which is notorious for its backwardness in agriculture?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: This question will be dealt with according to the needs of the situation and the needs of the places concerned.

SRI M. KALYANASUNDARAM: ஸார், அமைச்சர் அவர்கள் விலை குறைந்திருக்கிறது என்று கலெக்டர் கூறியிருப்பதாகச் சொன்னர்கள். விலை எந்த அளவுக்கு குறைந்திருக்கிறது? டிசம்பர் மாதத்திலிருந்ததைவிட ஜனவரியில் குறைந்திருக்கிறதா?- சென்ற ஜனவரியில் என்ன விலை விற்றது? இப்போது என்ன விலை விற்கிறது? இந்த விவரங்களை அமைச்சர் அவர்கள் கொடுக்க முடியுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: அந்த விவரங்கள் என்னிடம் இல்லை. கலெக்டர் சொன்னதைச் சொன்னேன். அது தவறு என்று மறுப்பதானல் மறுக்கலாம். தேவை இருக்கிறது என்பதனுல்தான் இன்னும் நியாய விலைக் கடைகளை மூடாமல் வைத்திருக்கிறோம்.

*Tractors and bulldozers*

*267 Q.—SRI M. P. SARATHI: கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) விவசாயத்துக்குத் தேவையான டிராக்டர்கள், புல்டோசர்கள் வாங்குவது அன்னிய செலாவணிக் கட்டுப்பாட்டினுல் நிறுத்தி வைககப்பட்டுள்ளதா?

(இ) மத்திய அரசினரிடம் இதற்கு சலுகை காட்டி, அன்னிய செலாவணி ஒதுக்க கேட்கப்பட்டதா?

(உ) அப்படியானல், மத்திய அரசினரின் பதில் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (அ) to (உ) The Government approached the Gobernment of India for the release of foreign exchange for the purchase of tractors required for the

30th January 1961]

Tractor Hiring Scheme and Tractor Hire Purchase Scheme. The Government of India have released foreign exchange to the tune of Rs. 18 lakhs for the purchase of tractors from the U.S.R.R. and Rs. 7 lakhs for the purchase of tractors from the United States of America for the Tractor Hiring Scheme. As regards the Tractor Hire Purchase Scheme, the Government of India have stated that the present foreign exchange position does not permit any additional import of tractors from free resources, that some firms have already been licensed for the manufacture of tractors within our country and that the production of tractors would get into stride during the Third Plan. They have also stated that until the locally manufactured tractors are available, this Government may on account of difficult foreign exchange schemes, meet the requirements to the extent possible from the normal imports.

**SRI M. P. SARATHI** : ஸார், எப்போது கேட்டாலும் விவசாய டெப்போவில் டிராக்டர் இல்லை, புல்டோசர் இல்லை என்று சொல்வதை நிவர்த்திக்க சர்க்கார் ஏதாவது நடவடிக்கை எடுப்பார்களா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : இருப்பதைக் கொடுக்கிறோம், இல்லாததை இல்லை என்று சொல்லுகிறோம். இதை நிவர்த்தி செய்வதற்குத்தான் 25 லட்சம் ரூபாய் சாங்ஷன் செய்யப்பட்டிருக்கிறது. ரஷ்யாவிலிருந்து வாங்க 18 லட்சமும், அமெரிக்காவிலிருந்து வாங்க 7 லட்சம் ரூபாயும் சாங்ஷன் ஆகியிருக்கிறது என்று சொன்னேன்.

**SRI A. VEDARATHNAM** : கனம் அமைச்சர் அவர்கள் நம்முடைய உள் நாட்டில் டிராக்டர்கள் செய்யப்படுவதாகக் குறிப்பிட்டார்கள். இங்கே எவ்வளவு உற்பத்தி ஆகிறது? நம்முடைய தேவையிலே எத்தனை சதவிகிதம் ஈடு செய்ய முடியும்? பற்றுக்குறைக்கு வெளி நாட்டிலிருந்து தருவிக்கப்படுகிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : அதுபற்றி என்னிடம் விவரம் இல்லை. இப்பொழுதுதான் லைசென்ஸ் கொடுக்கப்பட்டிருக்கிறது. பற்றுக்குறை இருக்கிறது. ஆகையினாலேதான் ரூபாய் 25 லட்சம் சாங்ஷன் ஆகியிருக்கிறது. அயல் நாட்டிலிருந்து வரவழைக்கப்படுகிறது. அது இல்லாமல் இருக்கிற பாரின் எக்சேஞ்சில் இறக்குமதி செய்து வாங்கிக்கொள்ளலாம்.

**SRI M. KALYANASUNDARAM** : எவ்வளவு மதிப்புள்ள டிராக்டர்கள் இறக்குமதி செய்யப்படவேண்டும் என்று நம்முடைய சர்க்கார் மத்திய சர்க்காருக்கு யோசனை கூறினார்கள்? அதில் எவ்வளவு கிடைத்தது ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM** : ரூபாய் 25 லட்ச மதிப்புள்ளது அரசாங்கத்தின் உபயோகத்திற்கு. அது வந்துவிட்டது. ஹயர்பர்சேஸ் ஸ்கீமுக்கு ரூ. 10 லட்சம் கேட்டோம். அது கிடைக்கவில்லை.

SRI A. GOVINDASAMY : டிராக்டர்கள் இங்கு கிடைக்காத காரணததினல் அதை வழங்க காலதாமதம் ஆகிறதா ? அல்லது ஒரு குறிப்பிட்ட இடத்தில், அல்லது டயத்தில்தான் வாங்க வேண்டும் என்ற காரணத்தினல் விவசாயிகள் வாங்க தடங்கலாக இருப்பதால் காலதாமதம் ஆகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அப்படி இல்லை. விவசாயிகள் கேட்பது இங்கு கிடைப்பதாக இருந்தால் கொடுக்கிருேம். அன்னிய நாட்டிலிருந்து வரவழைக்க வேண்டியிருந்தால் அதற்கு வேண்டிய அன்னிய நாட்டு செலவாணி இருப்பதைப் பார்த்துத்தான் முடிவு செய்யவேண்டியிருக்கிறது.

SRI K. B. S. MANI : நம்முடைய நாட்டில் உற்பத்தி செய்வதற்கு லைசென்ஸ் கொடுக்கப்பட்டிருப்பதாக அமைச்சர் அவர்கள் சொன்ஞர்கள். அப்படி எவ்வளவு மூலதனம் போட்டு எவ்வளவு காலத்தில், எத்தனை டிராக்டர்கள் உற்பத்தி செவதற்கான பெர்மிட்கள் வழங்கப்பட்டிருக்கின்றன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி என்னிடம் தகவல் இல்லை. வேருெரு கேள்வி என்னுடைய சகா தொழில் அமைச்சர் அவர்களுக்கு போட்டால், அவர்கள் விவரம் கொடுக்கலாம்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Sir, low H.P. tractors are manufactured in Japan. I want to know from the Hon. Minister whether, with a view to help small ryots, these tractors also will be imported from Japan and whether foreign exchange has been released for that purpose?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : For importing tractors from Japan, foreign exchange is the bottleneck.

SRI M. KALYANASUNDARAM : ஜப்பான், அமெரிக்கா ஆகிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதற்கு வெளி நாட்டுச் செலாவணி வேண்டியிருக்கலாம். ஆனல் ,சோவியத் யூனியனிலிருந்து இறக்குமதி செய்வதானல் ரூபாயிலே விற்கலாம், ரூபாயிலே வாங்கலாமே? அதையாவது அதிகப்படுத்துவதற்கு யோசனை கூறினர்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நம்முடைய விவசாயிகள் ரஷ்ய டிராக்டர்களை உபயோகிப்பதற்கு இன்னும் தயஙகுகிருர்கள். (குறுக்கீடு) நான் கூட ரஷ்யா போய்விட்டு வந்தேன். அதனல் கம்யூனிஸ்டு ஆகவில்லை. மெஷினைப் பார்த்து பயப்படுவதென்பது இல்லை. ரூ. 18 லட்சத்திற்கு ரஷ்யாவிலிருந்து வாங்குகிருேம். அது ரூபாய் பண்டாக இருப்பதால் சௌகரியம் தான். அந்த அளவுக்கு வாங்குவதாக முடிவு செய்திருக்கிருேம்.

SRI C. NATARAJAN : டிராக்டர்கள், புல்டோசர்களை விவசாயிகளுக்குக் கொடுப்பதற்காக 'ஹயர் பர்சேஸ் ஸ்கீம் வைத்திருக்கிருர்கள். அவர்கள் அதிகப் பணம் கட்டவேண்டும்

30th January 1961]

என்று ஏதோ விதி இருப்பதாகத் தெரிகிறது. அதைக் குறைத்து கட்டி வாங்குவதற்கு வழிவகைகள் செய்ய அரசாங்கத்திற்கு ஏதாவது ஆலோசனை உண்டா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதிக விலைக்கு வாங்குவதற்கே டிராக்டர்கள் இல்லை. அன்னியச் செலாவணி இல்லை. இதுபற்றி நிபந்தனைகளை மாற்றும் விஷயத்தைப் பற்றி தனியாக கேள்வி போடவேண்டும்.

SRI M. KANDASAMI PADAYACHI : உபயோகத்தில் இருக்கக் கூடிய சில டிராக்டர்கள், புல்டோஸர்கள் கெட்டுப்போய்விட்டால், ஸ்பேர் பார்ட்ஸ் இல்லாததால் வருஷக் கணக்கில் ரிபேர் ஆகாமல் இருக்கிறது, சாமான் இல்லை, சென்னைக்கு எழுதியிருக்கிறோம் என்று சொல்லுகிறார்கள். அப்படியில்லாமல் தேவையான ஸ்பேர் பார்ட்ஸ் வைத்திருந்தால் உடனே ரிபேர் செய்வதற்கு சௌகரியமாக இருக்கும். அதற்கு வேண்டிய முயற்சியை அரசாங்கம் எடுத்துக்கொள்ளுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்பேர் பார்ட்ஸுக்கும் அன்னியச் செலாவணி வேண்டியிருக்கிறது. இதற்கு சுமார் ரூ. 10, 12 லட்சம் வேண்டியிருக்கிறது. சமீபத்தில் மத்திய அரசாங்கம் ரூ. 3 லட்சம் வரையில் அனுமதித்திருக்கிறது. அது வரையில் ஸ்பேர் பார்ட்ஸ் வாங்கி இதையெல்லாம் சரிப்படுத்திக் கொண்டிருக்கிறோம்.

SRI A. GOVINDASAMY : போலண்டு டிராக்டர்கள் மலிவான விலையில் கிடைக்கிறதே? அதை அரசாங்கம் வாங்குவதற்கு ஏதாவது நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கிறார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ரஷ்யன் டிராக்டர் வருகிறது. அதைப் பார்த்துவிட்டு மற்றதைச் செய்யலாம்.

SRI V. K. KOTHANDARAMAN : ரூ. 25 லட்சத்திற்கு டிராக்டர்கள், புல்டோஸர்கள் வாங்கினும், அது தாலுகாவிற்கு ஒரு டிராக்டர், ஒரு புல்டோஸர் கூட காணவில்லை. தீவிர விவசாய அபிவிருத்தி செய்யவேண்டும் என்று மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தை தீட்டிக் கொண்டிருக்கக்கூடிய இந்த நேரத்தில் இதற்கு மேலும் அதிகப்படியாக பணம் ஒதுக்குவதற்கு வேண்டிய முயற்சிகளை கனம் அமைச்சர் அவர்கள் எடுத்துக்கொள்ளுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எவ்வளவு தூரம் சாத்தியப்படுமோ அவ்வளவு தூரம் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றி கனம் அங்கத்தினர் சொன்னார்கள். மூன்றாவது திட்டம் முடிவதற்குள்ளாக நமது நாட்டிலேயே உற்பத்தியாகும் டிராக்டர்கள் கிடைக்கும்.

[30th January 1961

*Landless agriculturists*

* 268 Q.—SRI S. M. ANNAMALAI : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நிலமில்லாத விவசாயிகளின் நலனுக்காக என்னென்ன திட்டங்கள் இதுவரை மேற்கொள்ளப்பட்டன ?

(இ) இதைக் குறித்து ஆராய்வதற்கு ஒரு கமிட்டி நியமிக்கப் பட்டதா ?

(உ) அப்படியானால், அந்த கமிட்டியினால் சமர்ப்பிக்கப்பட்ட அறிக்கை சட்டசபை நூல்நிலையத்தில் வைக்கப்படுமா ?

THE HON. SRI R. VENKATARAMAN : (அ) The following schemes are being implemented by Government for the benefit of the landless agriculturists :—

(1) Government are assigning lands to landless and poor persons up to an extent of 2½ acres of wet or 5 acres of dry lands per head.

(2) Co-operative Farming Societies of the Land Colonization or Tenant Farming Type and Gramdhan Societies are being organized for the benefit of landless agriculturists with financial assistance from the Government.

(3) A scheme known as the "Full Finance" scheme has been introduced with the object of providing the entire production and marketing finance required by the agricultural community, including landless agriculturists.

(இ) No, Sir.

(உ) Does not arise.

SRI S. M. ANNAMALAI : இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டம் முடியப்போகிற இந்தத் தருவாயில்கூட விவசாயத் தொழிலாளி களின் 'பெர் காபிடா இன்கம்' குறைந்து இருக்கிறது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? அப்படியானால் அவர்களுக்கு இப் பொழுது செய்துகொண்டிருக்கக்கூடிய உதவி போதாது, மேலும் பல உதவிகளைச் செய்யவேண்டியிருக்கும் என்பதை சர்க்கார் உணர்கிறார்களா ? அதற்கு சர்க்கார் மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் என்ன திட்டம் வைத்திருக்கிறார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : 'பெர் காபிடா இன்கம்' குறைந்திருக்கிறதா என்பதுபற்றி தனிக் கேள்வி போட்டால், அது பற்றி புள்ளிவிவரம் சேகரித்து கொடுக்கிறேன். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் விவசாய சம்பந்தமாக செய்யப் போவதை பட்ஜெட்டின்போது விவாதிக்கலாம்.

SRI P. G. MANICKAM : சென்னை ராஜ்யத்தில் விவசாயத் திற்கு லாயக்கான தரிசு நிலங்கள் எத்தனை ஏக்கராக்கள் இருக் கின்றன என்பது கணக்கிடப்பட்டிருந்தால், விவரம் அறிய விரும்புகிறேன்.

30th January 1961]

THE HON. SRI R. VENKATARAMAN: தனிக் கேள்வி வேண்டும்.

SRI A. GOVINDASAMY: ஆட்சேபணைக்கு உரிய நிலையில் இல்லாத நிலங்கள் ஆதி திராவிட மக்களாலும், பட்டாளத்திற்கு சென்று வந்தவர்களாலும் பயிரிடப்பட்டு வருகின்றன. அவர்கள் அப்புறப்படுத்தப்படுவதை தடுப்பதற்கு அரசாங்கம் ஏதாவது நடவடிக்கை எடுக்குமா?

THE HON. SRI R. VENKATARAMAN: எந்த இடம் ஆக்கிரமிக்கப்பட்டிருக்கிறதோ அதைப் பொறுத்திருக்கிறது. அஸைன் செய்யக்கூடிய இடமாக இருந்தால் ரெவின்யூ இலாகா மூலம் செய்யப்படுகிறது. அஸைன் செய்யக்கூடாத நிலமாக இருந்தால், அவர்களை அப்புறப்படுத்த வேண்டியிருக்கிறது.

MR. SPEAKER: அடுத்த இரண்டு கேள்விகளையும் சேர்த்து எடுத்துக்கொள்ளலாம்.

*269 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

நட்சத்திரக் குறியிட்டக் கேள்வி எண் 548-க்கு 1960-ம் வருடம் செப்டம்பர்மீ 8உ-ல் அளித்த பதிலையொட்டி நிலமில்லாத ஏழைகளுக்கு வீட்டு மனைகள் வாங்கித் தருவதற்கு சர்க்கார் எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவை?

THE HON. SRI R. VENKATARAMAN: The recommendation of the Fourth Housing Ministers' Conference relating to provision of open developed plots to the landless agriculturists has not been accepted by the Government of India, and, as such, no action was taken in pursuance of this recommendation.

*270 Q.—SRI S. M. ANNAMALAI: கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) 1959-ம் ஆண்டு நவம்பர் மாதத்தில் ஐதராபாத்தில் நடந்த நான்காவது மாநாட்டில் (Fourth Housing Ministers Conference) செய்த சிபார்சையொட்டி நிலமில்லாத ஏழைகளுக்கு வீடு கட்டுவதற்கு உதவிகள் செய்வதற்காக என்ன முயற்சிகள் எடுக்கப்பட்டன?

(இ) எவ்வளவு வீடுகள், வீட்டு மனைகள் இவ்வாண்டு வாங்கித் தரப்படும்?

(உ) இதில் ஹரிஜனங்கள், பிற்பட்டவர்கள், மிகவும் பிற்பட்டவர்களுக்கு எத்தனை?

THE HON. SRI R. VENKATARAMAN: (அ) to (உ) The attention of the Honourable Member is invited to the answer to starred question No. 26 by Sri S. M. Annamalai.

[30th January 1961

SRI S. M. ANNAMALAI : மத்திய சர்க்கார் ஒத்துக்கொள்ளாததன் காரணம் என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : அவர்கள் இந்த ஸ்கீம் சரியல்ல, இதில் செலவழிக்கப்படுகிற பணம் வீணுகப் போய் விடும் என்று கருதினுர்கள்.

*Rubber Board*

* 271 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(a) whether there is any proposal to set up a Rubber Board for the Madras State;

(b) whether the Rubber Board in Kerala has been advancing loans to small landholders in our State for starting rubber plantation ; and

(c) if so, the total amount advanced during the last five years?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) No, Sir.

(b) No, Sir.

(c) Does not arise.

SRI T. T. DANIEL : Now we are not producing the necessary quantity of rubber that we need for our requirements and in order to create an incentive in the minds of land owners who experience difficulties in getting loans from the Kerala Rubber Board, will the Government make the necessary recommendation to the Central Government that the Rubber Board should open a Branch at Madras so that rubber planters could get loans from them as the rubber planters in Kerala do?

THE HON. SRI R. VENKATARAMAN : The Rubber Board which is located in Kerala is an All-India Board and it is not for Kerala alone. There is no proposal to have separate Boards for each State and there is the All-India Board to attend to all these things. There is a scheme now before the Government for giving help to the extent of Rs. 750 per acre for bringing new areas under rubber cultivation.

SRI T. T. DANIEL : Now under the present scheme small landholders are not getting any loans and therefore, will the Government at least make a recommendation that small landholders also should get their loans?

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, representatives of small rubber planters are members of the Rubber Board and this matter should be taken up in the Board there.

30th January 1961]

**SRI A. VEDARATHNAM:** நம்முடைய மாநிலத்தில் ஆரம்பித்திருக்கிற ரப்பர் தோட்டங்களில் ரப்பர் உற்பத்தி துவங்கி விட்டதா? இல்லையானல் எப்பொழுது துவங்கும்?

**THE HON. SRI R. VENKATARAMAN:** அந்தக் கேள்வியை என்னுடைய சக அமைச்சர் விவசாய அமைச்சரிடம் போட வேண்டும்.

*Harijan Welfare Committee (North Arcot)*

*272 Q.—**SRI V. K. KOTHANDARAMAN:** கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதில் அளிப்பாரா—

வடாற்காடு ஜில்லா ஹரிஜன நல கமிட்டியிலுள்ள எல்லா அங்கத்தினர்களும் காங்கிரஸ் கட்சியைச் சார்ந்தவர்களாகவே இருப்பதற்குக் காரணமென்ன?

**THE HON. SRI P. KAKKAN:** The District Harijan Welfare Committees are advisory bodies constituted to advise the Government on matters relating to the amelioration of the conditions of the Harijans at district level and nomination of members to the Committee is not done on the basis of the party to which the members belong. While nominating members to the Committee due weight is given to the service rendered by them for the cause of the Harijan uplift. However, orders have been issued that the M.L.As., M.L.Cs., and M.Ps., of the taluk, where the meeting of the Committee is held, who are not already members of the Committee should be invited to attend the particular meeting as co-opted members.

**SRI V. K. KOTHANDARAMAN:** ஸார், கொஞ்ச நேரத்திற்கு முன்னல், கனம் அமைச்சரவர்கள் லாட்டரி சீட்டு போட்டு வினியோகம் செய்யப்படுகிறது என்று சொன்னர்கள். அதே போன்று, ஹரிஜனங்களுக்குக் கொடுக்கப்படும் கைத்தொழில் கருவிகள், ஜில்லா ரீதியாக கொடுக்கப்பட்டுக் கொண்டிருந்தது. இப்பொழுது சர்க்கார் உத்தரவு போட்டிருக்கிறபடி தாலூகா வாரியாகக் கொடுப்பதற்கு சப் கலெக்டர் ஒருவர், அஸிஸ்டெண்ட் டைரக்டர் ஆப் இண்டஸ்ட்ரீஸ் ஒருவர், அந்தத் தொகுதியில் உள்ள ஹரிஜன எம்.எல்.ஏ.—அப்படி அவர் இல்லாவிட்டால் ஹரிஜன காங்கிரஸ் சங்கத் தலைவர் ஒருவர் இம்மாதிரி இருக்கும் கமிட்டிதான் வினியோகம் செய்ய வேண்டும் என்று உத்தரவு போடப்பட்டிருக்கிறதா? அப்படியென்றல் அதன் நோக்கம் என்ன?

**THE HON. SRI P. KAKKAN:** கருவிகள் கொடுக்க கமிட்டிகள் இருக்கின்றன. உண்மையிலேயே யார் அவற்றை உபயோகிக்க கற்றுக் கொண்டிருக்கிறர்களோ அவர்களைப் பார்த்துக் கொடுக்கப் படுகிறது.

[30th January 1961

SRI V. K. KOTHANDARAMAN : ஜில்லா ரீதியில் கொடுக்கப் பட்டபோது, உண்மையிலேயே யார் யார் தொழிலைக் கற்றுக் கொண்டு இருக்கிறார்கள், திறமை உள்ளவர்களாக இருக்கிறார்கள் என்பதைப் பார்த்துக் கொடுக்கப்பட்டது. ஆனால், இப்பொழுது தாலூக்கா ரீதியில் கொடுக்கவேண்டும் என்று சொல்லும்போது, அந்த முறையை மாற்றுவதற்குக் காரணம் என்ன என்பதைத் தான் அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : மாறுதல் ஒன்றும் இல்லை; அதே முறையைத்தான் கையாளுகிறோம்.

SRI M. KALYANASUNDARAM : இம்மாதிரி கருவிகள் வினியோகிப்பதற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கும் கமிட்டியில் யார் யார் இருக்கவேண்டுமென்று சர்க்கார் உத்தரவு போட்டிருக் கிறார்களா ? அப்படியானால், அந்த உத்தரவைப் படிப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அதுதான் சொன்னேன். ஒவ் வொரு ஜில்லா கமிட்டியிலும் ஏழு அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். அந்த ஜில்லாவிலுள்ள, எம்.எல்.ஏ., எம்.எல்.ஸி., எம்.பி., இவர் களைக் கோ-ஆப்டெட் மெம்பர்களாக சேர்த்துக்கொள்ளவேண்டும் என்று சொல்லியிருக்கிறது என்று தெரிவிக்கிறேன்.

*Film Finance Corporation*

* 273 Q.—SRI N. K. PALANISAMI : } SRI N. R. THIAGARAJAN : } Will the Hon. the Minister for Industries be pleased to state whether there is any proposal to set up a branch of the Film Finance Corporation to help the small producers in Madras by advancing loans at a reason able rate of interest?

THE HON. SRI R. VENKATARAMAN : Government have no information on the question.

SRI N. K. PALANISAMI : ஸார், சர்க்கார் இந்தச் சினிமாத் தொழிலை அபிவிருத்திச் செய்ய, அதன் தரத்தை உயர்த்து வதற்காக, சிறு பட உற்பத்தியாளர்களுக்கு படத்தின் தரத்தின் பேரில் கடன் கொடுக்க ஏதாவது உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : இந்த பிலிம் பைனன்ஸ் கார்பொரேஷன் என்பது மத்திய சர்க்கார் ஏற்படுத்தியிருக்கக் கூடிய ஒரு கம்பெனி அது கம்பெனிஸ் ஆக்ட்டின்கீழ் ரிஜிஸ்டர் செய்யப்படுகிறது. அவர்கள் எந்த விதமான உதவி செய்வார்கள் என்றால், படத்தின் செலவில் 75 சதவிகிதம் கடன் உதவியாகக் கொடுப்பதற்கு இந்த கம்பெனி ஏற்பாடு செய்யும். ஆனால், இன்னும் இந்தக் கம்பெனி ஆரம்பிக்கப்படவில்லை; விதிகள் தயாராகி வருகின்றன. கம்பெனி ஆரம்பித்த பிறகு என்ன உதவிகள் செய்வார்கள் என்று பார்க்கலாம்.

30th January 1961]

*Scholarship*

* 274 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) why Harijan Scholarship funds granted to the South Travancore Hindu College were kept by the College authorities from November 1956 without distribution or without refunding them back;

(*b*) the amount thus kept in each year; and

(*c*) whether the college authorities have written to the Government or any other Governmental authority enquiring the Head of account to remit this amount; and if so, whether they have received any reply?

THE HON. SRI P. KAKKAN : (*a*) The College authorities have stated that they did not know the Head of Account under which the amount had to be credited to Government.

| | | | | RS. | NP. |
|---|---|---|---|---|---|
| (*b*) 1956—57 | .. | .. | .. | 9,746 | 62 |
| 1957—58 | .. | .. | .. | 49 | 00 |
| 1958—59 | .. | .. | .. | 886 | 50 |
| | Total | .. | | 10,682 | 12 |

(Rupees ten thousand six hundred and eighty-two and naye Paise twelve only.)

(*c*) No, Sir.

Attention is also invited to answers furnished on 18th April 1960 and 22nd April 1960 to Questions Nos. 698 and 784 respectively put by the same Membre.

SRI T. S. RAMASWAMI : அமைச்சரவர்கள் குறிப்பிட்டது போல் எந்தத் தலைப்பின்கீழ் கட்டுவது என்று தெரியாமல், கல்லூரி அதிபர்கள் எந்தத் தலைப்பின்கீழ் கட்ட வேண்டுமென்று கேட்டார்களா ? அப்படி இல்லையென்றால், கையில் வைத்திருந்தார்கள் என்பதற்காக என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI P. KAKKAN : ஏற்கனவே அரசாங்கம் கட்டளையிட்டிருக்கிறது. அது தெரியாமல்தான் அவர்கள் கையில் வைத்திருந்திருக்கிறார்கள்.

*Travellers' Bungalow (Courtallam)*

MR. SPEAKER : As the hon. Member who gave notice of question No. 275 is not in his seat, the question and answer will be printed in the proceedings.

* 275 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Works be pleased to state—

(*a*) the total number of tourists who have stayed in the Travellers' Bungalow at Courtallum so far;

[30th January 1961

(b) the total number of officers who have stayed in the Travellers' Bungalow at Courtallum and of these how many on duty; and

(c) The total number of tourists and officers respectively who have occupied the rooms during June, July and August 1960?

THE HON. SRI P. KAKKAN : (a) The total number of tourists who have stayed in the Tourists' Bungalow at Courtallum so far from 19th August 1959, the date of inauguration to 15th November 1960 is 123.

(b) The total number of officers who have stayed in the Tourists' Bungalow at Courtallum during the above period is 409.

No concession given to any officer occupying the bungalow on duty. As such the information whether they were on duty or not is not available in the Visitors' Book of the Circuit House.

(c) The total number of tourists and officers respectively who have occupied the rooms during June, July and August 1960 are given below :—

| | June 1960. | July 1960. | August 1960. |
|---|---|---|---|
| Officers .. .. .. .. | 37 | 30 | 40 |
| Tourists .. .. .. .. | 19 | 18 | 11 |
| Total .. | 56 | 48 | 51 |

*Vaippar*

* 276 *Q*.—SRI M. K. SOMASUNDARAM (on behalf of SRI N. R. THIAGARAJAN) : *கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) ராமநாதபுரம் ஜில்லா சாத்தூர் வழியாக ஓடும் வைப்பாற்றின் பிறகு சமுத்திரத்தில் வீணாவது கணக்கெடுக்கப்பட்டதா ?*

*(இ) வைப்பாற்றுத் தண்ணீர் மூலம் தற்போது பாசன வசதி எத்தனை ஏக்கருக்கு கொடுக்கப்படுகிறது ?*

*(உ) முழுவதும் உபயோகித்தால் இன்னும் எத்தனை ஏக்கருக்குப் பாய்ச்சலாம் ?*

THE HON. SRI P. KAKKAN : (a) No, Sir.

(b) An area of about 41,100 acres is benefited by the Vaippar river through the various tanks.

(c) At present, the supply available in the river is reported to be just sufficient to satisfy the existing irrigation requirements. No appreciable surplus is available for any new irrigation under the river.

30th January 1961]

SRI V. SUBBIAH : ஸார், வைப்பாறு நதியானது பெரும் பகுதி திருநெல்வேலியில் ஆரம்பித்து, கடலில் சங்கமம் ஆகி, அணைகள் இல்லாமல் தண்ணீர் வியர்த்தமாகப் போகிறது. பல இடங்களில் அணைகள் கட்டினால், கண்மாய்கள் நிறைந்து பல கிராமங்களுக்குச் சாகுபடிக்கு உதவும் என்பதால் அம்மாதிரிச் செய்யச் சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI P. KAKKAN : அரசாங்கத்திற்கு அப்பேர்ப்பட்ட உத்தேசம் இருக்கிறது ; ஏற்கெனவே பல அணைகள் கட்டப்பட்டிருக்கின்றன. புதிதாகக் கட்டுவது பற்றியெல்லாம் பரிசீலனை செய்யப்பட்டு வருகிறது.

SRI S. RAMASAMI NAIDU : வைப்பாறு மலையடிவாரத்தில் ஆரம்பிப்பதிலிருந்து 10, 12 அணைகள் இருக்கின்றன என்று கனம் அங்கத்தினர் ஞாபகத்திற்குக் கொண்டு வரவேண்டும் என்று அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

MR. SPEAKER : The hon. Member is making only a suggestion.

*Musical instruments (sales-tax)*

* 277 Q.—SRI A. VEDARATHNAM : கனம் கைத்தொழில் அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) இசைக் கருவிகள் மீதுள்ள விற்பனைவரி பற்றி தஞ்சை வீணை, தம்புரா செய்துவரும் தொழிலாளர்களிடமிருந்து ஏதேனும் கோரிக்கை வந்திருக்கிறதா ? அதன் விவரம் என்ன ?

(இ) அப்படியானால், அதன்பேரில் அரசாங்கம் எடுத்துக் கொண்ட நடவடிக்கை என்ன ?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) Yes, Sir.

It was represented that the levy of tax at 6 per cent single point under the Madras General Sales Tax Act, 1959 on musical instruments produced by them caused much hardship to the industry and it was accordingly requested that Tanjore Veenas and Tampuras might be exempted from sales tax.

(b) The Government have reduced the rate of single point tax payable under the Madras General Sales Tax Act, 1959, on the sales of musical instruments in this State from 6 per cent to 4 per cent with effect on and from the 1st December 1960.

SRI A. VEDARATHNAM : இந்த இசைக் கருவிகள் இந்த மாகாணத்தில் வேறு எங்காவது உற்பத்தி செய்யப்படுகின்றனவா ? வரி எவ்வளவு ? மிகக் குறைவான தொகையே வருவதனால், இந்தத் தொழிலை வளர்க்கும் நோக்கத்தோடு, இந்த வரியை நீக்க அரசாங்கம் முன்வருமா ?

[30th January 1961

**THE HON. SRI R. VENKATARAMAN :** வீணை, தம்புராவிற்கு மாத்திரம் நீக்கினுல், மற்ற இசைக் கருவிகள் செய்கிற வர்களும் தங்களுக்கும் அம்மாதிரியே நீக்க வேண்டும் என்று கேட்பார்கள். அப்பொழுது அதிகமாகப் பணம் நஷ்டமாகிவிடும். அதனுல்தான் வரியை 6 சதவிகிதத்திலிருந்து 4 சதவிகிதத்திற்கு குறைத்திருக்கிறது.

*Weavers (houses)*

* 278 Q.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) whether there are any renovation schemes for the existing houses of Weavers;

(b) The names of districts in which this scheme is introduced; and

(*c*) Whether there is any proposal to introduce this scheme in the Kanyakumari district?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) Yes, Sir.

(*b*) In Salem and Tirunelveli districts.

(*c*) No, Sir.

SRI T. T. DANIEL : May I know, Sir, whether the scheme benefits only the weavers who are members of the Co-operative Society and also may I know whther the total amount that is set apart for the scheme and the number of houses the Government intend to renovate?

**THE HON. SRI R. VENKATARAMAN :** இது கூட்டுறவு சங்கங் களில் சேர்ந்திருப்பவர்களுக்குத்தான் கொடுக்கப்படுகிறது. மேலப்பாளையத்தில் ரூ. 39,000 ஒதுக்கியிருந்தோம்; எவ்வளவு வீடுகள் ரிப்பேர் செய்யப்பட்டது என்ற புள்ளி விவரம் இப்பொழுது என்னிடம் இல்லை. சேலத்தில் ரூ. 38,000 ஒதுக்கி யிருந்தோம்; 31 வீடுகள் ரிப்பேர் செய்யப்பட்டிருக்கிறது.

SRI T. T. DANIEL : May I know, Sir how much amount is spent for renovating each house and may I also know whether any proposals were sent by the Weavers Co-operative Society in Kanyakumari district?

THE HON. SRI R. VENKATARAMAN : We have no proposal from Kanyakumari district. I have information about Melapalayam and it is forty houses.

**SRI M. R. KANDASWAMI MUDALIYAR :** இந்த வீடு கட்டும் திட்டம் சொசைடிகளில் சேர்ந்தவர்களுக்கு மட்டுந்தான் உதவி யளிக்கிறது. தனிப்பட்ட நெசவாளர்களுக்கு உபயோகமாகப்

30th January 1961]

பயன்படுத்தவில்லை. இதுவரையிலும் அப்படி இருந்தாலும், இனி மேலாவது அதிகமாகத் தொகையை ஒதுக்கி, தனிப்பட்டவர் களுக்கும் உதவியளிக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா ?

THE HON. SRI R. VENKATARAMAN : பட்ஜெட்டில் பொது விவாதத்தின்போது, கைத்தறி நெசவாளர்கள் பிரச்சினை வரும் போது, இதைப்பற்றியும் விவாதிக்கலாம். இப்பொழுது இருக்கும் ஸ்கீம் பிரகாரம் அவர்களுக்கு உதவி கொடுக்க முடியாது.

MR. SPEAKER : இப்பொழுது 9½ மணியாகிவிட்டது. ஆனால், இன்னும் இரண்டு கேள்விகள் பாக்கி இருக்கின்றன. அவைகளையும் முடித்துவிட சபை அனுமதிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன். 9–30 a.m.

*Dam (Watrap)*

* 279 *Q.*—SRI M. KALYANASUNDARAM (on behalf of SRI V. K. KOTHANDARAMAN) : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதில் அளிப்பாரா—

(அ) ராமநாதபுரம் ஜில்லா வத்ராயிருப்பு கிராமத்தில் பிளவுக்கல் பாறை அணைக்கட்டு கட்டும்படி கோரி மனுக்கள் வந்துள்ளனவா ?

(இ) அப்படியானால் என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Yes, Sir.

(*b*) Gaugings are being conducted to assess the availability of supplies required for the scheme.

SRI M. KALYANASUNDARAM : ஆராய்ச்சி தொடங்கி எத்தனை காலம் ஆகிறது ? இறுதியான முடிவு எடுக்க இன்னும் எவ்வளவு காலம் ஆகும் ?

THE HON. SRI P. KAKKAN : The proposal for formation of a reservoir across Pilavukkalparai to impound the water of Kavalar and Periyar was already considered in 1928, 1946 and 1954 and dropped for the reason that the supply available in the river was insufficient for the existing ayacut and the river lower down and there was no extra space available. However the proposal has been taken up for consideration in 1960 with reference to representations received in 1957.

*Government House, Kanyakumari*

* 280 *Q.*—SRI T. S. RAMASWAMI : Will the Hon. Minister for Works be pleased to state—

(*a*) whether the Government have received any petition from one Sri Pichayya of Kanyakumari in November regarding the disappearance of some wooden and other materials from the Government House, Kanyakumari;

(b) Whether this was enquired into and any action was taken;

(c) If so, the details thereof?

THE HON. SRI P. KAKKAN : (a) & (b) Yes Sir.

(c) A petition from one Sri S. Pitchayya of Kanyakumari was received in November 1960 regarding the disappearance of some wooden and other materials from the Government House, Kanyakumari The matter has been enquired into and it has been ascertained that certain dismantled wooden materials (timber scantlings, etc.) which were available when certain repairs to the portico of the Government House at Cape Comorin were carried out and which were found not required for any other works, were requisitioned by the Assistant Engineer (Electrical), Madurai, for use on electrical works elsewhere, and those materials were given to the Assistant Engineer (Electrical) by the Executive Engineer, Public Works Department, Kanyakumari Division, on transfer basis.

SRI M. KALYANASUNDARAM : எவ்வளவு பழைய மரச் சாமான்கள் எடுக்கப்பட்டன? அவையனைத்தும் சரியாக ஜாபிதாவில் சேர்க்கப்பட்டு, மதுரையில் இருக்கும் அஸிஸ்டெண்ட் இன்ஜினீர் காரியாலயத்திற்குப் போயிருக்கிறதா என்பதைச் சரிபார்த்தார்களா?

THE HON. SRI P. KAKKAN : சரி பார்த்துத்தான் அவர்கள் முடிவு செய்திருக்கிறார்கள் என்பதைக் கனம் அங்கத்தினர் அவர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன். ஒரு இலாகாவிலிருந்து இன்னொரு இலாகாவுக்குப் போகும் காரணத்தால் சரியாகப் பார்த்துத்தான் ஏற்பாடு செய்கிறோம்.

SRI T. S. RAMASWAMI : அந்த 'ரெக்விஸிஷன்' எந்தத் தேதியில் வந்தது? அந்த சாமான்கள் போன பின் வந்ததா? அதற்கு முன்னால் வந்ததா?

THE HON. SRI P. KAKKAN : தேதி பற்றிய தகவல் என்னிடம் இப்பொழுது இல்லை.

SRI M. KALYANASUNDARAM : நான் கேட்ட கேள்வி, அந்த ரெக்விஸிஷனிலே கண்டுள்ள சாமான்களைக் கொடுத்திருக்கிறார்களா, இல்லையா என்று அல்ல. அந்தக் கட்டிடத்திலிருந்து பழைய சாமான்கள் எந்தத் தேதியில் எடுக்கப்பட்டனவோ, அந்தத் தேதியிலேயே யாராவது ஜாபிதா வைத்துக்கொண்டிருந்தார்களா, அந்தச் சாமான்களில் திருட்டுப் போகவில்லை என்று கனம் அமைச்சர் அவர்களுக்கு நிச்சயமாகத் தெரியுமா?

THE HON. SRI P. KAKKAN : நான் வைத்திருக்கும் தகவல்படி, திருட்டு எந்தத் தேதியில் போனது என்ற பிரச்சினையே

30th January 1961]

கிடையாது. ஒரு டிபார்ட்மென்ட் இன்னொரு டிபார்ட்மென்டைக் கேட்டிருக்கிறார்கள். அந்த டிபார்ட்மென்ட் கொடுத்திருக்கிறார்கள். அந்தத் தகவல்தான் என்னிடத்தில் இருக்கிறது. தனியாகக் கேள்வி போட்டால், கனம் அங்கத்தினர் கேட்கும் மற்ற விவரங்களுக்கும் பதில் சொல்கிறேன்.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

### II.—POINT OF INFORMATION *RE* SITTINGS OF THE HOUSE.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : It was decided previously that the House would sit both in the morning and evening on 28th instant. Some of us would not come in the morning of 28th instant. We wanted to participate in the discussion in the evening. But when we came a bit late, we found to our disappointment that the House had adjourned at 1-30 p.m. for the day. I want to know, from you, Mr. Speaker whether the House could be adjourned all of a sudden just to suit the whims and fancies of some hon. Members of this House.

MR. SPEAKER : The hon. member should know that the House is the supreme authority to decide. If an hon. Member were to move a motion in the House and the House approves it, what can the Speaker do? I have to carry out the decision of the House. If the hon. Member did not come in the morning, it is not my fault. He could have come in the morning and taken part in the debate. What has been done is perfectly in order and the House as the supreme body has decided.

### III.—POINT OF INFORMATION *RE* A POSTPONED QUESTION.

SRI K. VINAYAKAM : On a point of information, Sir. There was a starred question in my name on 28th January 1961 and I requested that it might be postponed to to-day. But I do not find the question in to-day's list of questions nor is the concerned Minister present in the House. May I know whether the question would be taken up when the concerned Minister is present or when would it be taken up?

MR. SPEAKER : It will be taken up to-morrow.

### IV.—ADJOURNMENT MOTION *RE* FAILURE OF THE POLICE TO PROTECT THE CITIZENS OF TIRUCHIRAPPALLI AGAINST ACTS OF ROWDYISM.

MR. SPEAKER : I have received notice of an adjournment motion from the hon. Member Sri M. Kalyanasundaram under Rule 42. Before I allow Sri Kalyanasundaram to go further I should get from the Hon. Minister all the relevant facts.

SRI M. KALYANASUNDARAM : Sir, I move that the House be adjourned to discuss the following matter . . .

MR. SPEAKER : If the hon. Member moves, then the matter will be before the House. Then I will be in difficulty.

SRI M. KALYANASUNDARAM : I must state the matter because the Hon. Minister may not be aware of the same. *திருச்சி நல்ரத்திலே 25-ந் தேதியன்று பகல் நேரத்தில் சில ரௌடிகள் அரிவாள் முதலிய ஆயுதங்களைத் தாங்கிக் கொண்டு, கடைகளைச் சூறையடித்து, ரயில்வே ஸ்டேஷன் மீது கூட கற்களை வீசி, ரயில்வே சிப்பந்திகளையும், ஸ்டேஷன் மாஸ்டரையும், போர்டர்களையும் பயமுறுத்தி இருக்கிறார்கள். காரணம் என்னவென்றால், இதற்கு முன்பு நடந்த க்ரிமினல் வழக்கில் சம்பந்தப்பட்ட ஒருசிலரை, அவர்களுக்கு எதிராக சாட்சியம் கூறி, போலீசுக்குக் காட்டிக் கொடுத்த குற்றத்திற்காக இப்படிப் பயமுறுத்தி இருக்கிறார்கள்.*

MR. SPEAKER : The hon. Member is making a speech.

SRI M. KALYANASUNDARAM : *விவரங்கள் கொடுத்தால் தானே கனம் அமைச்சர் விசாரிக்க முடியும்? அதனால்தான் சொல்கிறேன். போலீசார் அந்த நிகழ்ச்சி நடந்துகொண்டிருக்கும்போது பாதுகாப்பு கொடுக்கவில்லை என்பது மட்டுமல்ல; அதன் பிறகு கூட அவர்களைக் கண்டுபிடிக்க முடியாமலிருப்பதாக அறிகிறேன். போலீசாரால் கண்டுபிடிக்க முடியாமல் தப்பிக் கொண்டு போவதற்கு அவர்கள் என்ன அவ்வளவு சாமர்த்திய சாலிகளா? போலீசார் தக்க நடவடிக்கை எடுக்குமாறு கனம் அமைச்சர் அவர்கள் உத்தரவிடுவாரா என்று அறிய விரும்புகிறேன்.*

THE HON. SRI M. BHAKTAVATSALAM : *நான் திருச்சியில் 26-ந் தேதியன்று இருந்தேன். இந்தச் சம்பவம் பற்றி போலீசாரிடத்தில் விசாரித்தேன். அவர்கள் இதைப்பற்றி நடவடிக்கை எடுத்துக்கொண்டுதான் வருகிறார்கள். சில பேர்களை 'அரெஸ்ட்' செய்திருப்பதாகக் கூடத் தெரிகிறது. அது பத்திரிகையில் கூட வந்திருப்பதைக் கனம் அங்கத்தினர்கள் கவனித்திருப்பார்கள். ஆகையால், இதுபற்றி நடவடிக்கை எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறது, இது அவசரப் பிரேரணைக்குத் தகுந்ததல்ல என்று நான் தெரிவித்துக்கொள்கிறேன்.*

MR. SPEAKER : *கோர்ட்டில் இதைப்பற்றி கேஸ் இருந்தால் 'டிஸ்கஸ்' பண்ண முடியாது.*

SRI M. KALYANASUNDARAM : *யார் குற்றவாளி என்று சொல்லவில்லை. எனவே, நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.*

MR. SPEAKER : The Police are taking necessary action in the matter. So I rule it out of order.

V—CALLING ATTENTION TO THE DAMAGE CAUSED BY CYCLONE AND RAINS IN TIRUNELVELI DISTRICT.

MR. SPEAKER : I have received notice from the hon. Member Sri M. S. Selvarajan calling the attention of the Hon. Minister for Works to an urgent matter of public importance under Rule 41 of the Assembly Rules.

I want to clear a misunderstanding on the part of the hon. Member. The hon. Member may kindly look into Rule 41 which states as follows :

"A member may, after questions, and with the previous permission of the Speaker, call the attention of a Minister to any matter of urgent public importance and the Minister may then make a brief statement on the matter or ask for time to make a statement later."

It means that the hon. Member can only raise the question. In Lok Sabha the practice is that no member is allowed to make a speech under Rule 197. The reply of the Hon. Minister also should be brief. It is necessary for the hon. Member under Rule 41 not to make a speech and for the Hon. Minister while giving his reply to make only a brief statement. Probably the hon. Member was not aware of the Rule. Yesterday when the hon. Member was making a speech I interrupted. But he refused to yield. The hon. Member should only raise the question and not make a speech.

SRI M. S. SELVARAJAN : I want to bring to the notice of this revered House a matter of urgent public importance, viz., the heavy damages caused to a number of big and small boats at Tuticorin Port area and along the coastal areas of Koilpatti, Srivaikuntam, Tiruchendur and Nanguneri Taluks and the damages caused to the salt factories, thousands of huts and houses, temples and churches, lakhs of plantain trees, betel leaf farms, coconut, palmyrah and other trees in Tiruchendur, Nanguneri, Tirunelveli and Srivaikuntam Taluks, due to the cyclone and heavy rain on the 10th January 1961 and the breaches in many roads throughout Tirunelveli District especially in Tiruchendur, Srivaikuntam, Koilpatti and Nanguneri Taluks and the lack of immediate remedial measures.

THE HON. SRI P. KAKKAN : On the night of 10th January 1961 there was heavy rain in Tirunelveli District on account of a deep depression near Jaffna. As a result of the cyclone, which struck Tuticorin on the same night, nine lighters discharging the cargo in the steamer anchorage at the port, sank, and one vessel ran aground off the Hare Island. Immediately on receipt of intimation about the cyclone damage from the Tuticorin Port Trust authorities, this Government requested the Government of India, Ministry of Transport and Communications, by telegram to send tug 'Cochin' from Cochin Port to Tuticorin to assist in salvaging

the sunken boats. A diving team, consisting of two divers, 13 men and diving equipment, was immediately sent to Tuticorin by the Madras Port Trust, as requested by this Government. The tug 'Mannar' stationed at Tuticorin, and the dredger 'Tuticorin,' and one of the off-shore fishing launches found suitable for diving operations, are also engaged in the salvage operations. The State Port Officer, Madras, was sent to Tuticorin immediately after the cyclone and he is still there, personally supervising the salvage operations and giving necessary advice and assistance to the Port authorities. According to the latest reports received from Tuticorin, the position of seven sunken boats has been located and buoys laid. The lighter, which grounded off the Hare Island, has been brought ashore. The position of the remaining two boats has not yet been located. At the request of the Tuticorin Port Trust, the Government of India were requested by this Government to arrange for naval assistance for expediting the salvage work. The Government of India have arranged for a naval survey party to reach Tuticorin on 29th January 1961 to locate the remaining sunken boats. This party will also be able to blow-up obstruction, if it is considered absolutely necessary. In the meantime, the State Port Officer has chartered out an alternate route for navigation and regular traffic in the Port has been resumed from the 26th instant. Every effort is being made to clear the normal route and open it for traffic at the earliest time possible. There was no loss of life and the loss of property due to the sinking of boats is estimated at Rs. 5 lakhs, as reported by the Chairman, Tuticorin Port Trust.

Due to heavy rain, there was sudden and unexpected floods in Thambraparani river on the night of 10th January 1961. Nineteen persons were stranded in Thaipoosam Mandapam and on the top of a smaller Mandapam nearby in the river bed. Two of them, one male and one female, who attempted to cross the floods, were drowned. The remaining stranded persons were rescued with the help of a country boat with great difficulty by the evening of 11th January 1961. In the early hours of 12th January 1961 telephonic message was received by the Collector regarding heavy discharge of water from Papanasam and Manimuthar Reservoirs. In anticipation of the low-lying inhabited areas on either side of the river being inundated, the Tahsildars through whose areas the Thambraparani river passes were fore-warned telegraphically about the anticipated heavy inflows in the river and asked to take all precautionary measures. The Municipal authorities of Tirunelveli, Palayamkottah and Melapalayam were asked to take immediate action for the exacuaton of the areas, whch are likely to be affected and fore-warn the people about the floods in other areas. The Revenue and Police officials in the District Headquarters were on the alert and arrangements were made to evacuate the residents of low-lying areas wherever necessity arise. All precautionary measures were taken by the Collector in time to warn the people and officials.

30th January 1961] [Sri P. Kakkan]

The heavy rains and cyclonic weather affected other areas also in the District, more especially in Nanguneri taluk. Detailed reports about these are awaited.

Regarding breaches due to floods, the Government have issued instructions to the Chief Engineers (Highways and Rural Works and Irrigation) and other officers of the Department, that breaches in roads, tanks etc., and damages to culverts and bridges, should be repaired immediately and restored to normal use without any delay. Diversions to roads have been provided wherever necessary, till the repairs are completed.

It will, thus, be seen that the Government and the departmental officers have taken all steps that are necessary and are possible in rendering the necessary assistance during the time of the floods and cyclone and after.

MR. SPEAKER : The ruling I gave with regard to calling attention under Rule 41 will apply hereafter to all hon. Members and not only to the hon. Member, Sri M. S. Selvarajan.

SRI M. KALYANASUNDARAM : கனம் அமைச்சர் அவர்கள் கூறிய பதிலிலிருந்து. . . .

MR. SPEAKER : இந்த விதியின்படி எப்படி பேசமுடியும்? விதி எல்லோருக்கும் ஒன்றுதான். எனக்குமேல் உங்களுக்கு அனுபவம் இருக்கிறதே! ஆகவே அமைச்சர் கூறியவற்றிற்கு மேல் ஒன்றும் கேட்கவே முடியாது.

## VI—PRESENTATION OF THE REPORT OF THE SELECT COMMITTEE ON THE MADRAS STATE HOUSING BOARD BILL, 1960 (L.A. BILL No. 31 OF 1960).

THE HON. SRI R. VENKATARAMAN : Sir, I present the Report of the Select Committee on the Madras State Housing Board Bill, 1960 (L.A. Bill No. 31 of 1960).

## VII—GOVERNMENT BILL.

### THE MADRAS APPROPRIATION BILL, 1961 (L.A. BILL NO. 6 OF 1961).

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move "that the Madras Appropriation Bill, 1961 (L.A. Bill No. 6 of 1961) be taken into consideration."

MR. SPEAKER : The question is—

'That the Madras Appropriation Bill, 1961 (L.A. Bill No 6 of 1961) be taken into consideration.'

The motion was put and carried.

SRI M. KALYANASUNDARAM : Sir, I want to speak on the motion.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, the hon. Member may speak at the third reading stage.

MR. SPEAKER : I have already put the motion to the vote of the House and the motion has been carried. Anyhow, the hon. Member may speak at the time of the third reading.

Clauses 1 and 2 were put and carried.

*Preamble.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move the following amendment :—

'In the Preamble, *for* the words "Eleventh Year", *substitute* the words "Twelfth Year".

MR. SPEAKER : The question is—

'In the Preamble, *for* the words "Eleventh Year", *substitute* the words "Twelfth Year".

The amendment was put and carried.

The Preamble, as amended, was put and carried.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, I move that the Madras Appropriation Bill, 1961 (L.A. Bill No. 6 of 1961), as amended, be passed.

MR. SPEAKER : Motion moved—

'That the Madras Appropriation Bill, 1961 (L.A. Bill No. 6 of 1961), as amended, be passed.'

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த மசோதாவின் மூலம் அதிகமாக ஏற்படக்கூடிய செலவுக்கு 6 கோடி ரூபாய்க்கு அதிகமாக உபமான்யத்தில் கேட்டிருக்கிறார்கள். அதை இந்தச் சபை அனுமதித்து இருக்கிறது. அதிலே அரசாங்கம் கவனிக்கவேண்டிய சில விஷயங்களை அவர்களுடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். முதலாவதாக பஞ்சாயத்து அமைப்புகளுக்காக ஒதுக்கப்பட்டிருக்கிற அதிகத் தொகையைப்பற்றி நான் பொது விவாதத்தின்போது சில விஷயங்களை எடுத்துக் காட்டியிருக்கிறேன். ஏற்படக்கூடிய காலதாமதத்தைப்பற்றியும் புதிதாகத் தோன்றிய பஞ்சாயத்துக்கள் இயங்க முடியாமல் இருப்பது பற்றியும் குறிப்பிட்டிருக்கிறேன். புதிதாகத் தோன்றிய பஞ்சாயத்துத் தலைவர்களை அழைத்து வந்து சுற்றுப் பிரயாணம் செய்து, நகரங்களில் பல அபிவிருத்தித் திட்டங்களைக் காட்டுகிறார்கள். அதைப்பற்றி ஆட்சேபணை இல்லை. வரவேற்கிறேன். அந்த அனுபவத்தை வைத்துக்கொண்டு ஊருக்குப் போனால்—காகிதம் கிடையாது, பணமும் கிடையாது. புதிதாகத் தோன்றிய பஞ்சாயத்துக்களுக்குக் குறைந்தது 100 ரூபாயாவது அரசாங்கம் ஒதுக்கினால் பின்னால் சர்க்கார் கொடுக்கக்கூடிய மானியத்திலே ஈடு செய்து கொண்டாலும் கொள்ளலாம்.

30th January 1961] [Sri M. Kalyanasundaram]

இல்லாவிட்டாலும்கூட ஆரம்ப செலவிற்காக, நாம் ஒரு மான்யமாகக் கொடுத்த தொகையாக அதைக் கருதி அவர்கள் ஆரம்ப வேலைகள் தொடங்க உதவியாக இருக்கவேண்டும். அப்படி பண உதவி செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதோடு "ஹோர அண்ட் கோ"-க்கு தந்திக்கு மேல் தந்தி போய் கொண்டிருக்கிறது. இன்னும் தேவையான பாரங்கள், புத்தகங்கள், ரசீது புத்தகங்கள் இவையெல்லாம் பஞ்சாயத்துகளுக்கு அனுப்பவில்லை என்பதை நான் கனம் அமைச்சர் அவர்கள் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். இல்லாவிடில், விசேஷ நடவடிக்கைகள் எடுத்து ஒவ்வொரு ஜில்லாவிலும் கலெக்டர்கள் கையில் அதிகாரத்தைக் கொடுத்து தேவையான புத்தகங்கள், பாரங்கள் இவைகளை அந்த அந்த ஜில்லாக்களிலேயே அச்சடித்து உடனடியாகக் கொடுக்க ஏற்பாடு செய்தால் இந்த பஞ்சாயத்துகள் உடனடியாக இயங்க முடியும். ஹோர அண்ட் கோ-க்கு இதையெல்லாம் பூர்த்தி செய்யமுடியுமா என்ற சந்தேகம் எனக்கிருக்கிறது. ஆகவே, ஆரம்ப நடவடிக்கையாக இவற்றை சப்ளை செய்ய நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அடுத்தபடியாக, கிராம கர்ணங்களை பஞ்சாயத்து காரியதரிசியாக நியமிப்பது என்பதுபற்றி. பஞ்சாயத்து காரியதரிசி என்ற புதிய பதவியை உத்தரவு மூலம் சிருஷ்டித்திருக்கிறார்கள். பஞ்சாயத்து காரியதரிசி என்ற பதவி நியமிப்பதற்கு இந்தச் சட்டத்தில் அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்கிறதா? கமிஷனரை நியமிக்க அரசாங்கத்திற்கு அதிகாரம் இருக்கிறது. இம்மாதிரி பதவிகளை தயார் செய்ய சட்டத்தில் இடமிருக்கிறது. ஆனால் பஞ்சாயத்துக்களில் பஞ்சாயத்து காரியதரிசி என்ற பதவியை ஏற்படுத்தி, கிராம கர்ணங்களை பஞ்சாயத்து காரியதரிசிகள் என்று அந்தஸ்தோடுள்ள ஒரு பொறுப்பையும் கொடுத்தால் பஞ்சாயத்துக்கள் கிராமக் கர்ணங்கள் கையில் மாறி விடுமே, தவிர பஞ்சாயத்துக்கள் சுதந்திரமாக இயங்கக் கூடிய ஒரு நிலை இருக்காது, ஆரம்பத்தில் அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், அந்தந்த பஞ்சாயத்துக்கள் விருப்பப்படி செய்யலாம், அவர்கள் விரும்பினால் செய்யலாம், இல்லாவிடில் இல்லை. என்று. அமைச்சர் அவர்களின் எண்ணம் அதுவாகயிருக்கலாம். திருச்சி ஜில்லாவிற்கு சென்றிருந்தேன் நான். 26-ம் தேதி அங்கிருந்தேன். அங்குள்ள தலைவர்கள் என்ன சொன்னார்கள் என்றால், கட்சி வித்தியாசம் இல்லாமல், கலெக்டர் பஞ்சாயத்து மகாநாடுகள் கூட்டி கணக்குப்பிள்ளைகள் கட்டாயமாக காரியதரிசிகளாக நியமிக்கப்படவேண்டும், அப்படியானால் மேற்கொண்டு சலுகைகள் கொடுக்க முடியும், அப்படிச் செய்தால்தான் திட்ட வேலைகளுக்கு உதவி செய்ய முடியும், அப்படி கணக்குப்பிள்ளைகளை காரியதரிசியாக ஏற்றுக்கொள்ளாத பஞ்சாயத்துக்கள் புறக்கணிக்கப்படும் என்பதாக அவர்கள் என்னிடம் முறையிட்டார்கள். இதை அமைச்சர் அவர்களின் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன், சர்க்கார் உத்தரவு மூலம் செக்ரட்டரி என்ற பதவியை சிருஷ்டித்திருக்கிறார்கள். எந்த அதிகாரத்தை உபயோகித்து

[Sri M. Kalyanasundaram] [30th January 1961

இதைச் செய்கிறார்கள்? கணக்குப்பிள்ளை, மணியக்காரர் இவர்களுக்கு அதிக சம்பளம் கொடுக்க வேண்டியிருக்கலாம். பத்து ரூபாய் அதிகம் கொடுக்கயிருக்கிறார்கள். பல அபிவிருத்தி வேலைகள் நடந்து கொண்டிருக்கின்றன. திடீரென்று, மத்திய அரசாங்க அதிகாரிகள், ராஜ்ய சர்க்கார் அமைச்சர்கள், அவர்கள் மட்டுமன்றி மற்ற அதிகாரிகளும் வந்து பல விவரங்கள் கேட்கிறார்கள். கணக்குப்பிள்ளை, மணியக்காரர் இவர்கள், அவர்களுக்கு வேண்டிய விவரங்களைக் கொடுத்து அவர்களை திருப்தி செய்ய வேண்டியிருக்கிறது. அவர்களது வேலையும் அதிகரித்திருக்கிறது. அவர்களுக்கு ஏற்கெனவே கொடுத்து வந்திருக்கும் சம்பளத்தை அதிகரிக்க வேண்டிய அவசியம் இருக்கிறது என்பதையும் ஒப்புக்கொள்கிறேன். அதற்காக கொடுக்கட்டும். ஆனால் கணக்குப்பிள்ளைகளை காரியதரிசிகளாக நியமிக்க வேண்டுமென்று சொல்வது தவறு. அப்படிச் செய்வது, பஞ்சாயத்துகள் சுதந்திரமாக இயங்குவதற்கு முட்டுக்கட்டையாக இருக்கும் என்பதை நான் கனம் அமைச்சர் அவர்களுக்கு தெரிவித்துக் கொள்ள விரும்புகிறேன். மக்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரம், தாங்கள் வசிக்கும் பகுதியிலிருந்து ஒரு உறுப்பினரைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் தேர்ந்தெடுக்கும் உறுப்பினர்கள் தலைவரை தேர்ந்தெடுப்பார்கள், அவர்கள் பஞ்சாயத்து யூனியன் சேர்மனை தேர்ந்தெடுப்பார்கள். ஆக, பஞ்சாயத்தின் பெயரில் மக்களுக்கு கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரம் வெகு சொற்பம். அப்படியிருக்க அந்த அதிகாரத்தையும் எடுத்துவிடக் கூடாது கணக்குப் பிள்ளைகளை காரியதரிசிகளாக நியமிப்பதின் மூலம். பர்ஸ்ட் க்ளாஸ் பஞ்சாயத்துக்களில் அதிகாரிகளின் குறுக்கீடு இருக்கிறது என்பதை நாம் அனுபவத்தில் பார்க்கிறோம். நகரசபைகளில் கமிஷனரின் குறுக்கீடு இருந்து நகரசபைகள் சுதந்திரமாக இயங்க முடியாத நிலையில் இருக்கிறது என்பதை சுட்டிக்காட்டியிருக்கிறோம். இது ஒரு கட்சிப் பிரச்னை அல்ல. ஆகவே கணக்கர்களை பஞ்சாயத்து காரியதரிசிகளாக நியமிக்கும் கொள்கை அறவே கை விடப்பட வேண்டுமென்று கூற விரும்புகிறேன். அடுத்தபடியாக, "அனிமல் ஹஸ்பன்ட்ரி". 202,000 ரூபாய் அதிகமாக கோரியிருக்கிறார்கள், 1,000 முரா ஜாதி எருமைக் கிடாக் கன்றுகள் வாங்குவதற்காக. வாங்கும் தீர்மானத்தை ஆட்சேபிக்கவில்லை. நல்ல திட்டம்தான். நம் ராஜ்யத்தில் பால் அபிவிருத்திக்காக எடுக்கும் திட்டம் என்பதற்காக வரவேற்கிறேன். ஆனால் கன்றுகள் வாங்கும் முறைபற்றி சில புகார்கள் எனக்கு வந்திருக்கின்றன. கீழ்பாக்கத்தில் . . . . . . . .

MR. SPEAKER : The hon. Member cannot talk about policies and details during the Third Reading stage. He should have spoken about these things when the clauses were considered. He has missed the bus. He should have referred to all these things during the second reading stage? If he has not done that, what can the Chair do in the matter?

30th January 1961]

SRI M. KALYANASUNDARAM : I am sorry, Sir. Even in the first instance, I stood up. But unfortunately, the Speaker did not notice me, or rather, I did not catch his eye.

MR. SPEAKER : I wish only to point out that it is quite inappropriate to refer to all these matters during the Third Reading stage.

SRI M. KALYANASUNDARAM : I crave your indulgence, Sir. for a few minutes.

MR SPEAKER : The hon. Member should be brief.

**SRI M. KALYANASUNDARAM** : பாலிஸியைப் பற்றித்தான் பேசுகிறேன் கன்றுகள் வாங்கும் திட்டத்தைப்பற்றி சொல்லவில்லை. வாங்கும் கொள்கையில், முறையில் சில புகார்கள் இருக்கின்றன, விலை அதிகமாக இருப்பதாக. ஒரு கன்றுக்கு 220 ரூபாய் என்று சொன்னால் அது அதிக விலை என்று நான் நினைக்கவில்லை. ஒரு கிடாக் கன்றுக்கு அவ்வளவு கொடுக்கலாம். ஆனால் அந்த விலைக்கு தகுந்ததாகயிருக்கவேண்டும். அப்படி விலைக்கு தகுந்ததாகயில்லை, ஏமாற்றப்படுகிறது என்ற புகார்கள் எனக்கு வந்திருக்கிறது. அதை விவசாய அமைச்சர் அவர்களுக்கு அனுப்பியிருப்பதாக எனக்கு ஞாபகம். ஆகவே அதை பரிசீலனை செய்து, பணம் பட்டுவாடா செய்வதற்கு முன் அதை விசாரிக்க வேண்டும், வாங்கும் முறையில் என்ன கோளாறு இருக்கிறதென்று, ஏன் இவை கண்ட்ராக்டர்கள் மூலம் வாங்கப்படவேண்டும்? அடுத்தபடியாக, ஜமீன்தார்களுக்கு நஷ்டஈடு கொடுக்கும் விஷயமாக திறமையாக வேலை நடந்திருக்கிறது. சர்வே செட்டில்மன்ட் முடிந்திருக்கிறது. எதிர்பார்த்ததற்கு மேல் இவ்வாண்டு கொடுக்கப்பட்டிருக்கிறது அதை வரவேற்கிறேன். வரவேற்பது ஜமீன்தார்களுக்கு நஷ்டஈடு வருவதால் அல்ல. நமது சர்வேயர்கள் தாற்காலிகமாக நியமிக்கப்பட்டு வேலை செய்து கொண்டிருக்கிறார்கள். பத்து வருடத்திற்கு மேல் சர்வீஸ் ஆனவர்கள்கூட இருக்கிறார்கள், என்பது தெரிந்த விஷயம். அவர்களின் சம்பள விகிதத்திலும் வித்தியாசம் இருக்கிறது. பர்மெனன்ட்டாக இருப்பவர்களுக்கு கொடுக்கப்படும் சம்பளம் அவர்களுக்குக் கொடுக்கப்படவில்லை. அவர்களின் எதிர்காலம் என்ன என்பதுபற்றி அவர்களுக்கு கவலை ஏற்பட்டிருக்கிறது. பூர்த்தியடையக் கூடிய பாசனத் திட்டங்களில் உள்ள தாற்காலிக சிப்பந்திகளின் நிலையும் இப்படித்தான் இருக்கிறது. ஆகவே, இவர்களுக்கெல்லாம் எந்த விதமான பிரச்னையும் ஏற்படாமல் அதற்கு உடனடியாக உத்தரவு பிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு முடித்துக்கொள்கிறேன்.

**SRI S. LAZAR** : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் பேசுகிறபோது ஒன்றிரண்டு குறிப்புகள் கொடுத்ததின் காரணமாக அதற்கு பதில் சொல்லக்கூடிய முறையில் இப்பொழுது நான் எழுந்து நிற்கிறேன். அவர்கள்

பேசும்போது, பஞ்சாயத்துகளுக்கு காரியதரிசியாக கர்ணங்கள் கட்டாயமாக எடுத்துக் கொள்ளப்படவேண்டுமென்று கலெக்டரோ அல்லது அவர்களுக்குக் கீழ் இருக்கும் அதிகாரிகளோ கட்டாயப் படுத்துகிறார்கள். ஒவ்வொரு கூட்டத்திலும் என்று அவர்களுக்கு தகவல் வந்ததாக சொன்னார்கள். ஒவ்வொரு கூட்டத்திலும் கலந்து கொண்டவன் என்ற முறையிலே அது சரியான தகவல் அல்ல என்று நான் கூற விரும்புகிறேன். ஒவ்வொரு கூட்டத்திலும் இது விளக்கமாக எடுத்துச் சொல்லப்பட்டது. அந்தக் கூட்டங் களிலே நான் இருந்து பேசக் கூடிய வாய்ப்பும் இருந்தது. ஒரு சில அங்கத்தினர்கள், அது சரியாக நடைமுறையில் வராது என்று சொன்னார்கள், அது உண்மை. அவர்களுக்கு இதுபற்றி விளக்க மாக எடுத்துச் சொல்லப்பட்டது, இது நடைமுறையில் எப்படி யிருக்கிறது என்று பரீட்சார்த்தமாக பார்க்கயிருக்கிறது அரசாங்கம் என்று. கட்டாயப்படுத்த வேண்டுமென்ற நோக்கம் இருந்திருந்தால் விதிகளிலே அதை அமைத்திருக்க முடியும் என்று எடுத்துச்சொல்லப்பட்டது. ஆங்காங்குள்ள நிலைமையை அனுசரித்து அந்தந்த பஞ்சாயத்துக்கள் இஷ்டப்பட்டால் எடுத்துக் கொள்ளலாம் என்று சொல்லப்பட்டதை நான் அவர்கள் கவனத்திற்கு கொண்டுவர விரும்புகிறேன். ஒவ்வொரு மகா நாட்டிலும் ஏகமனதாக தீர்மானம் நிறைவேற்றப்பட்டது என்பதை நான் அவர்கள் கவனத்திற்கு கொண்டு வர விரும்பு கிறேன். அடுத்தபடியாக, பஞ்சாயத்து காரியதரிசியாக கர்ணம் நியமிக்கப்பட வேண்டுமென்று சொல்லும்போது அதற்கு சட்டத்தில் இடம் கொடுக்கப்படவில்லை என்று சொல்வது சரியல்ல. சட்டத்தில் இடம் கொடுக்கப்படவில்லையென்றால் விதிகளில்தான் இதை அமைக்க வேண்டுமே தவிர சட்டத்திலல்ல. பஞ்சாயத் துக்களுக்கு அந்த உரிமை அளிக்கப்பட்டிருக்கிறது என்ற முறையில் பார்க்கும்போது, அது நடைமுறையில் எப்படியிருக்கும் என்பது பார்க்கப் பார்க்கத்தான் தெரியும். ஆக, கனம் கல்யாண சுந்தரம் அவர்கள் கொடுத்த தகவல் சரியான தகவல் அல்ல என்ற கருத்தை மட்டும் சொல்லிக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

10-00 a.m. SRI A. GOVINDASAMY : கனம் சபாநாயகர் அவர்களே, இதில் நாங்கள் எவ்வளவுதான் எதிர்த்தாலும் கனம் அமைச்சர் அவர்கள் கோரியிருக்கும் இந்தத் தொகையை எடுத்துக்கொள்ளத் தான் போகிறார்கள். குறிப்பிட்ட இனத்திற்கு செலவு செய்யத் தான் போகிறார். இருந்தாலும் இந்த தலைப்பின் கீழ் என்னென்ன வழி முறைகளை கைகொள்ளவேண்டும் என்பதைப்பற்றி திரு கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னார்கள். அந்த அடிப்படை யிலேயே நானும் சில விஷயங்களை குறிப்பிட விரும்புகிறேன். இந்த பஞ்சாயத்து சட்டத்தை நிறைவேற்றுகின்றபொழுது, அவசர அவசரமாக இதை நிறைவேற்றியதால் இப்போது பல தவறு தல்கள் நடைபெறுகின்றன. அதை நான் சுட்டிக்காட்டி அதற்கு பரிகாரம் தேட வேண்டும் என்கின்ற முறையில் சில விஷயங்களை,

குறிப்பிட விரும்புகிறேன். நாங்கள் சொல்லுகின்ற கருத்து சரியானது என்று தோன்றினல் அதன்படி சர்க்கார் தங்கள் கொள்கைகளை திருத்திக்கொள்ள கடமைப்பட்டிருக்கிருர்கள். அதன்படி செய்யவேண்டும் என்றும் கேட்டுக்கொள்கிறேன். என்னுடைய மாவட்டத்தில் சிதம்பரம் வட்டத்தில் இடையாறு என்கிற கிராமத்தில் பஞ்சாயத் போர்டு தலைவர் தேர்தல் நடந்தது. அதில் ஏழு உறுப்பினர்கள் இருந்தார்கள். அதில் ஐந்து ஆறு பேர் வோட்டு போட வேண்டியிருந்தது. தேர்தல் நடத்த வந்த அதிகாரி ஆறு சீட்டுகளில் கையெழுத்துப்போட்டு கொடுத்தார்கள். பின்னல் அதை எண்ணுகின்றபொழுது ஒருவருக்கு 4 சீட்டுகளும் வேறொருவனுக்கு இரண்டு சீட்டுகளும் கிடைத்தன. இருந்தும் முடிவை உடனேயே தெரிவிக்காமல் வந்துவிட்டார்கள் அந்த அதிகாரிகள். இந்த சாதாரணமான விஷயம்கூட சர்க்காரின் கவனத்திற்கு வந்தது. இம்மாதிரி முடிவை உடனே தெரிவிக்காததின் காரணமாக பல தவருன எண்ணங்களை பரப்புவதற்கு ஏதுவாக இருக்கிறது. பின்னல் சர்க்கார் இந்த முடிவை தெரிவித்தார்கள். இந்த மாதிரியான சம்பவங்களை பார்த்தாவது எதிர்காலத்தில் தடுத்து நிறுத்த சர்க்கார் கடமைப்பட்டிருக்கிருர்கள். மேலும் வடார்காடு மாவட்டத்தில் போளூர் பஞ்சாயத்து யூனியனில் தலைவர் கூட்டத்தை ஒத்தி வைக்கிறேன் என்று சொல்லிவிட்டு போன பிறகும்கூட பின்னல் அங்கேயிருந்த அங்கத்தினர்கள் அவர்களோடு இருந்த உப தலைவரைக்கூட பொருட்படுத்தாமல் வேறு ஒரு உறுப்பினரை தலைமை வகிப்பதற்கு என்று தேர்ந்தெடுத்து கூட்டத்தை பின்னல் நடத்தியிருக்கிருர்கள். இதைத் தடுத்து நிறுத்த எந்த அதிகாரிக்கும் தைரியம் இல்லை. இம்மாதிரி நடத்தக் கூடியவர்களுக்கு இன்னும் இது போன்ற பாதுகாப்பு கொடுத்துக் கொண்டிருக்க வேண்டுமா? இம்மாதிரியான தவறுகள் பல பஞ்சாயத்து யூனியன்களிலும் நடந்து கொண்டிருக்கின்றன. என்னுடைய கவனத்திற்கு வந்த ஒன்றிரண்டாகத்தான் இப்போது சொன்னேன். இதையெல்லாம் பார்த்து பஞ்சாயத்து யூனியன் நல்ல முறையில் இயங்க வேண்டுமென்ருல், அதிகாரிகளும் பஞ்சாயத் தலைவர்களும் ஒற்றுமையாக செயலாற்ற வேண்டும். இல்லையென்ருல் நல்ல முறையில் பஞ்சாயத்துகள் நடைபெருது. அது மட்டுமல்ல நாம் எதிர்பார்க்கின்ற பல வெற்றிகளுக்கு இடையூருக அமையும். அதோடு திரு கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னது போன்று பல இடங்களிலும் இன்னும் பாரங்கள் வரவில்லை. பஞ்சாயத் தலைவர் தேர்தல்கள் எல்லாம் முடிவடைந்து இருக்கின்றன. இவற்றிற்கான கிளார்க்குகள், பில் கலெக்டர்கள் எல்லாம்கூட போட்டுவிட்டார்கள். மேலும் கணக்குப்பிள்ளைகளை ஒவ்வொரு கிராம பஞ்சாயத்துக்கும் காரியதரிசியாக போடவேண்டும் என்ற எண்ணமிருப்பதாக தெரிகிறது. இவ்விதம் போட்டால் ஜனநாயக முறையில் இயங்கக் கூடிய பஞ்சாயத்துகள் சர்க்காருடைய ஊழியர்கள் என்ற முறையில் இருக்கக்கூடிய அதிகாரிகள் பஞ்சாயத்து நிர்வாகத்தில் குறுக்கிட நேரிடும் என்ற காரணத்தால், இந்த

முறையே ஆட்சேபிக்கின்றோம் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன். அவர்களுடைய ஊதியத்தை உயர்த்துவதில் எங்களுக்கு எந்தவிதமான ஆட்சேபணையும் இல்லை. அவர்களுக்கு இப்போதே அரசாங்கம் எவ்வளவோ வேலைகளை கொடுத்திருக்கிறது. ஏற்கெனவே அவர்களுக்கு இருக்கின்ற வேலைகளோடு இதுவும் சேர்த்துக்கொடுத்தால் அவர்களுக்கு மிகவும் கஷ்டமாக இருக்கும், அதோடு திறமையாகவும் வேலைகள் நடைபெறாது. ஆகவே இதற்கும் நல்ல முறையில் வழிவகை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

* **Sri V. K. RAMASWAMY MUDALIYAR** : கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது ஜில்லா போர்டுக்கு கொடுத்துவரும் மான்யம் தக்க சமயத்தில் கொடுப்பதில்லை. இதன் காரணமாக ஏராளமான சாலைகள் எல்லாம் பழுது பார்க்கப்படாமல் இருந்து வருகின்றன. முக்கியமாக எங்கள் மாவட்டத்தில் கழிந்த மழையின் காரணமாக ரோடுகள் எல்லாம் சேதமடைந்து கிடந்தன. அவற்றை எல்லாம் பழுது பார்ப்பதற்காக சுமார் 3½ லட்சம் ரூபாய் வேண்டும் என்று எஸ்டிமேட் போட்டு அனுப்பினார்கள். நாளது வரையிலும் அது சாங்க்ஷன் செய்யப்பட்டதாகத் தெரியவில்லை. மெயின்டனன்ஸ் பணத்திலிருந்து வேலை செய்ய வேண்டியதாக இருக்கிறது. இதன் காரணமாக எல்லா இடங்களிலும் வேலை செய்ய முடியவில்லை. செய்த வேலைகளுக்கு எல்லாம் காண்டிராக்டர்களால் சரியான முறையில் பணம் வாங்க முடியவில்லை. இதைப்பற்றி நிதி அமைச்சர் அவர்களுக்கு எழுதியிருந்தேன். அதற்கு வழக்கப்படி டெப்யூடி செக்ரட்டரியிடமிருந்து "கவனிக்கப்படும்" என்ற பதில் வந்தது. போதுமான நிதி ஒதுக்கப்படாததின் காரணமாக இவ்விதமான பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஜில்லா போர்டு தலைவர்களாக கலெக்டர்களை போட்டுவிட்டு அவர்களை எல்லாம் நான்-அபிஷியலாக நடத்தக் கூடாது என்று கேட்டுக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM :** கனம் சபாநாயகர் அவர்களே, இப்போது பொது விவாதம் போல் நடந்திருக்கிறது. சில குறிப்பிட்ட விஷயங்களுக்கு மட்டும் நான் பதில் சொல்ல விரும்புகிறேன். பஞ்சாயத்துக்களுக்கு அட்வான்ஸ் தொகை கொடுக்க வேண்டுமென்றுள்ள கருத்தை திரு கல்யாணசுந்தரம் அவர்கள் தெரிவித்தார்கள். இதில், வருஷ மத்தியில் பஞ்சாயத்துக்களும் பஞ்சாயத் யூனியன்களும் ஆரம்பமானதால் சில சிக்கல்கள் வந்தன. அடுத்த மாதத்தில் இந்த சிக்கல் இராது என்று நம்புகிறேன். வருஷ ஆரம்பத்தில் இம்மாதிரியான நடவடிக்கை எடுக்க மிகவும் வசதியாக இருக்கும் என்று நம்புகிறேன். ஆகவே இனி சிக்கல்கள் ஒன்றும் ஏற்படாது என்று நம்புகிறேன். அடுத்ததாக பாரங்கள் பிரிண்டாகவில்லை என்பதைப்பற்றி சொன்னார்கள். பாரங்கள் எல்லாம் பிரிண்டாகி எல்லா இடங்களுக்கும் வழங்கப்

30th January 1961] [Sri C. Subramaniam]

பட்டு வருகிறது என்ற தகவல் எனக்கு கிடைத்திருக்கிறது. கர்ணங்களை செக்ரட்டரியாக நியமிப்பதுபற்றி அவர்கள் நிர்ப்பந்தப்படுத்தப்படுகிறார்கள் என்று சொன்னார்கள். அதிலும் திருச்சியில் அவ்விதம் இருப்பதாகச் சொன்னார்கள், ஆகவே அந்தக் கூட்டங்களில் எல்லாம் கலந்து கொண்ட திரு லாசர் அவர்கள் அதற்குப் பதிலும் சொன்னார்கள். எந்த பஞ்சாயத்து விரும்புகின்றதோ அந்த பஞ்சாயத்துக்களில் மட்டும் கர்ணங்களை செக்ரட்டரியாக வைத்துக்கொள்ளலாம் என்பதுதான் சர்க்காருடைய கொள்கை. இதில் எந்தவிதமான கட்டாயமும் கிடையாது.

அதற்கடுத்தபடியாக, திரு. கோவிந்தசாமி அவர்கள் பஞ்சாயத்து சட்டத்தைப்பற்றி சொன்ன போது இது அவசர அவசரமாக நிறைவேற்றப்பட்டது என்று சொன்னார்கள். அவர்கள் எந்த அடிப்படையில் சொன்னார்கள் என்பது தெரியவில்லை. இதற்கு தனியாக ஒரு வொயிட் பேப்பர் தயார் செய்து, அதை எல்லாக் கட்சித் தலைவர்களும் பரிசிலனை செய்து விவாதித்து, பின்னால் அதன் அடிப்படையில் மசோதா தயார் செய்து, அந்த மசோதா மீதும் பரிசீலனை செய்து விவாதித்துத்தான் நிறைவேற்றப்பட்டது. இப்படியிருக்கும்போது இது அவசர அவசரமாக நிறைவேற்றப்பட்டது என்று எந்த அடிப்படையில் சொல்லுகிறார்கள் என்று தெரியவில்லை. அதோடு ஒன்றிரண்டு பஞ்சாயத்துக்களில் நடந்த தவறான நிகழ்ச்சிகளைப்பற்றி குறிப்பிட்டார்கள். ஆயிரக்கணக்கான பஞ்சாயத்துக்கள் நடக்கும்போது இந்த மாதிரி ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளை வைத்துக்கொண்டு எல்லா இடங்களிலுமே இந்த மாதிரியான தவறுகள்தான் நடைபெறுகின்றன என்று நாம் நினைக்கக்கூடாது. இதே சமயத்தில் எல்லா இடங்களிலும் விதிக்குட்பட்டுதான் பஞ்சாயத்துக்கள் நடந்து கொண்டிருக்கின்றன என்று சொல்வதற்கு நான் தயாராக இல்லை. ஆங்காங்கு இருக்கக்கூடிய சூழ்நிலையில் சில குறைகள் தவறுகள் ஏற்படலாம். அதை பெரிதாக்கி எல்லா பஞ்சாயத்துக்களும் இப்படித்தான் நடக்கின்றன என்கின்ற அபிப்பிராயத்தை பரவ விடாமல், ஆங்காங்கு ஏற்படுகின்ற தவறுதல்களை நீக்குவதற்கு எல்லோரும் முயற்சிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக எருமைக் கன்றுகள் வாங்குவதைப்பற்றி திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் குறிப்பிட்டார்கள். அதைப்பற்றி விவசாய அமைச்சர் அவர்களுக்கும் எழுதியிருப்பதாக தெரிவித்தார்கள். இதிலுள்ள நுணுக்கம் என்னவென்று எனக்கு இப்போது தெரியவில்லை. விவசாய அமைச்சர் அவர்கள் இதைப்பற்றி கவனிப்பார்கள் என்று நம்புகிறேன்.

ஜில்லா போர்டுகளுக்கு மான்யங்கள் கொடுக்கப்படுவதைப் பற்றி கனம் ராமசாமி முதலியார் அவர்கள் தெரிவித்தார்கள். அந்த விஷயம் இந்த மசோதாவில் இல்லையாகையால் அது பற்றிய

விவரங்கள் இப்போது என்னிடத்தில் இல்லை. முக்கியமாக வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட இடங்களுக்கெல்லாம் போதிய அளவு பணம் செலவு செய்வதற்கு ஒதுக்கப்பட்டிருக்கிறது என்பது தான் என்னுடைய எண்ணம். அதில் ஏதாவது தாமதம் இருந்தால் கூடிய சீக்கிரமே கொடுக்கப்படும் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க வேண்டியதில்லை.

அதே போன்றுதான் ஜமீன்தாரி செட்டில்மென்ட் பற்றி குறிப்பிட்டார்கள். இதில் தகுதியுள்ள பயிற்சியுள்ள அதிகாரிகளுக்கு வேலை கொடுக்கவேண்டும் என்பதைப் பற்றி சொன்னார்கள். இவர்களை தகுதியுள்ள வேலைகளுக்கு அவர்களுடைய தகுதிக்கு தகுந்தவாறு பயிற்சிக்கு தகுந்தவாறு எடுத்துக்கொள்வதற்கு முயற்சிக்கப்படும் என்ற உறுதியை மட்டும் என்றால் இப்போது சொல்லிக்கொள்ள முடியும். அவர்களுக்கு வேலை கொடுக்க வேண்டும் என்பதற்காக வேலையில்லாத இடத்தில் கூடுதலாக கொண்டு போய் அமர்த்த வேண்டும் என்று சொல்வது தவறு என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். ஆகவே இந்த மசோதாவை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : இந்த விஷயத்தை ஓட்டுக்கு விடும் முன்பு மூன்றாவது ரீடிங் போது என்ன பேச முடியும் என்று சபைக்கு எடுத்துச் சொல்ல விரும்புகின்றேன்.

The Speaker of the Lok Sabha has made the following observations :—

"In the third reading no speeches are allowed ordinarily, of course, except in extraordinary cases, and the case that members do not come in time cannot be treated as an extraordinary case. The position is that at the third reading the discussion is restricted only to such amendments or changes that have been made during the clause-by-clause reading stage. That is the general rule".

In fact, we have not made any changes in the Bill during the clause-by-clause consideration. That is why I said that all those points referred to by hon. Member Sri Kalyanasundaram during the Third Reading stage were quite inappropriate.

THE HON. SRI C. SUBRAMANIAM : We have changed 'Eleventh Year' into 'Twelfth Year' in the Preamble and probably that might be considered as an amendment.

MR. SPEAKER : The question is :

"That the Madras Appropriation Bill, 1961 (L.A. Bill No. 6 of 1961), as amended, be passed."

The motion was put and carried and the Bill, as amended, was passed.

## VIII.—NON-OFFICIAL BUSINESS.

### *A. Bills.*

(1) THE MADRAS INDUSTRIAL ESTABLISHMENTS (REGULATION OF TERMINATION OF EMPLOYMENT) BILL, 1960 (L.A. BILL NO. 28 OF 1960).

SRI M. KALYANASUNDARAM : Sir, to-day is essentially a non-official day. But still, I request that this Bill may please be taken up on the next Non-Official Day.

MR. SPEAKER : Well, that is a matter to be decided by ballot again.

(2) THE MADRAS AGRICULTURISTS RELIEF (AMENDMENT) BILL, 1960 (L.A. BILL NO. 29 OF 1960).

MR. SPEAKER : Hon. Member Sri K. R. Viswanathan who has given notice of this Bill has written to me to say that he does not want to move this Bill at the present moment. So, we may take up the next Bill.

(3) THE MADRAS ESTATES (ABOLITION AND CONVERSION INTO RYOTWARI) AMENDMENT BILL, 1961.

SRI R. SRINIVASA IYER : Sir, I move—

" That leave be granted for the introduction of the Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amendment Bill, 1961."

MR. SPEAKER : The question is—

" That leave be granted for the introduction of the Madras Estates (Abolition and Convertion into Ryotwari) Amendment Bill, 1961."

The motion was put and carried and leave was granted.

SRI R. SRINIVASA IYER : Sir, I introduce the Bill.

MR. SPEAKER : The Bill is introduced.

(4) THE MADRAS DISABLED PERSONS (REHABILITATION AND EMPLOYMENT) BILL, 1961.

SRI M. S. SELVARAJAN : Sir, I move—

" That leave be granted for the introduction of the Madras Disabled Persons (Rehabilitation and Employment) Bill, 1961."

MR. SPEAKER : The question is—

" That leave be granted for the introduction of the Madras Disabled Persons (Rehabilitation and Employment) Bill, 1961."

The motion was put and carried and leave was granted.

SRI M. S. SELVARAJAN : I introduce the Bill, Sir.

MR. SPEAKER : The Bill is introduced.

## B. Resolutions.

### RENAMING MADRAS STATE AS 'TAMILNAD'.

MR. SPEAKER : Hon. Member Sri P. S. Chinnadurai has spoken on the last non-official day for 10 minutes or so on this resolution. He may now continue his speech.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, before we take up the resolution for consideration, I would like to make a submission to the House.

கனம் சபாநாயகர் அவர்களே, இந்தத் தீர்மானத்தைப் பற்றி விவாதிக்காமல் வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டும் அல்லது இதை இன்னொரு தேதியில் எடுத்துக் கொள்ளவேண்டும் என்று தாழ்மையுடன் கேட்டுக்கொள்கிறேன். இதற்கு முக்கிய காரணம், இன்றைக்கு இந்தத் தீர்மானம் இங்கு விவாதத்திற்கு வரும் என்பது எல்லோருக்கும் தெரியும். உள்நாட்டு அமைச்சர் அவர்களும் 28-ம் தேதியன்று இங்கு பதிலளிக்கும்போது தமிழ் நாடு என்று பெயரிடுவதைப் பற்றி சர்க்காருடைய கொள்கை என்ன என்பதைப் பற்றி இந்தத் தீர்மானத்தின்கீழ் விவாதம் வரும்போது சர்க்கார் கட்சித் தரப்பில் விளக்குவோம் என்று தெரிவித்திருக்கிறார்கள். இதற்கு மத்தியிலே இந்த மாநிலத்திற்கு தமிழ் நாடு என்று பெயர் வைக்க வேண்டும் என்பதற்காக ஒரு போராட்டம் நடத்தவேண்டுமென்பதற்காக தமிழரசுக் கழகம் ஏற்பாடு செய்துகொண்டிருந்தது. அவர்களிடத்திலும் இந்த விஷயம் விளக்கப்பட்டது. கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள்கூட ஒரு தந்தி கொடுத்திருக்கிறார்கள் என்பதை பத்திரிகையில் பார்த்தேன். அது ரொம்பவும் சரியான கோரிக்கைதான். அதுவும் தவிர இதைப் பற்றி இந்தச் சபையில் விவாதம் வரும்போது, இதே நாளன்று, இந்தக் கிளர்ச்சி—இந்த இயக்கம்—வேறு எங்கும் இல்லாமல், இங்கேயே, அங்கத்தினர்களும்கூட இங்கே உள்ளே வரமுடியாதபடி நடைபெறுமானால் இது வருத்தப்படவேண்டிய விஷயம் என்று தெரிவித்துக்கொள்கிறேன். இந்தச் சூழ்நிலையில், சர்க்கார் தங்கள் கொள்கையை, இந்தக் கிளர்ச்சி இருக்கும்வரை விளக்கிச் சொல்லத் தயாராக இல்லை என்று தாழ்மையுடன் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகையால் இந்த விவாதத்தை இப்போது எடுத்துக்கொள்ளாமல் இதை வாபஸ் வாங்கி விடுவதானாலும் சரி, அப்படியில்லையானால் இன்னொரு நாள்—நாம் 17-ம் தேதி கூடப்போகிறோம், 25-ம் தேதிதான் பட்ஜெட் வரப் போகிறது, அதற்கிடையில்—விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளலாம் என்று கேட்டுக்கொள்கிறேன். இதை ஏற்றுக்கொண்டு இந்தத் தீர்மானத்தை விவாதத்திற்கு எடுத்துக்கொள்வதை ஒத்திப் போடவேண்டும், இதற்கு கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்கள் ஒத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இதை விவாதத்திற்கு எடுத்துக்கொண்டால் உணர்ச்சிவசப்பட்டு ஏற்படக்கூடிய நிகழ்ச்சிகள் இருக்கின்றன. இப்போதைக்கு

30th January 1961] [Sri C. Subramaniam]

இதை ஒத்திப்போட்டு, சுமுகமான சூழ்நிலையில் விவாதிக்கலாம் என்று கனம் சின்னதுரை அவர்களுக்கும் தெரிவித்துக்கொள் கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : கனம் சபாநாயகர் அவர் களே, இது கனம் அங்கத்தினர் சின்னதுரை அவர்களுடைய சொந்த விஷயம் அல்ல. இது சபைக்குச் சொந்தமான விஷயம். சபைக்கு வந்த பிறகு சபை அனுமதித்தால்தான் வாபஸ் பெற முடியும். சர்க்காருடைய கொள்கையைப் பற்றி நிதி அமைச்சர் அவர்கள் சொல்ல உரிமை உண்டு—நான் ஆட்சேபிக்கவில்லை. ஆனால் இந்தத் தீர்மானம் தமிழரசுக் கழகம் இன்றைக்குப் போராட்டம் நடத்தப் போகிறார்கள் என்று இப்போது கொடுக்கப்பட்ட தீர்மானம் அல்ல. இந்தத் தீர்மானம் ஐந்து மாதங்களுக்கு முன்னாலேயே சபையில் கொண்டு வரப்பட்டு விவாதம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. முன்பு நிதி அமைச்சர் அவர்கள் வெளிநாடு போவதால், திரும்பி வந்தவுடன் ஆற அமர விவாதிக்கலாம் என்று யோசனை சொன்னதற்கிணங்க கால தாமதம் ஏற்பட்டு இன்றைக்கு வருகிறது. வெளியிலே யாரோ எதோ செய்கிறார்கள் என்பதற் காக நம் கடமையைச் செய்யாமல் இருப்பது தவறு என்று நினைக் கிறேன். இன்றைக்கு எதாவது ஒரு கட்சி இந்தத் தீர்மானத்தை எடுத்துக் கொள்ளவேண்டாமென்று சொல்லுகிறதா என்று பார்ப் பதற்காக எல்லா கட்சித் தலைவர்களையும் கண்டு பேசினேன். அவர்களும் எடுத்துக் கொள்ளவேண்டுமென்று தான் சொன்னார் கள். போலீஸ் அமைச்சர் அவர்கள் இரண்டு நாட்களுக்கு முன்பு நிதி அமைச்சர் அவர்கள் சர்க்காருடைய கொள்கையை விளக்கு வார்கள் என்று கூறினார்கள். சர்க்கார் கௌரவத்தில் நிற்கக் கூடாது. எது நியாயம், எது நியாயம் இல்லை என்பதை பொது மக்கள் தீர்ப்புக் கூறட்டும். இதில் சர்க்காருடைய கொள்கை என்ன என்பதை விளக்க இந்த சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். இன்று இந்தச் சபையின்மேல் நம்பிக்கை வைத்து, சபையின் நல்லெண்ணத்தில் நம்பிக்கை வைத்து இந்தத் தீர்மானத்தை அமைச்சர் அவர்கள் வேண்டாமென்று சொல்லாமல் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன்.

SRI C. N. ANNADURAI : தலைவர் அவர்களே, தமிழ்நாட்டு மக்கள் மிக ஆவலாக எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்ற பிரச்னை பற்றிய விவாதத்தை வெளியில் நடக்கின்ற கிளர்ச்சிகள் உணர்ச்சி களைத் தூண்டிவிடும் என்ற காரணத்தைக் காட்டி பேசவேண்டாம் என்று சொன்னால், அது துரைத்தனத்தாருடைய பலஹீனத்தைக் காட்டுகிறது என்று வெளியில் உள்ளவர்கள் நிச்சயமாகக் கருது வார்கள். ஜனநாயக நாட்டில் கிளர்ச்சிகளுக்கு மதிப்புக் கொடுக்க வேண்டும். ஜனநாயகத்தில், வெளியில் கிளர்ச்சி செய்கிறார்கள், ஆகையால் எதையுமே செய்ய மாட்டோம், சொல்ல மாட்டோம் என்று சொல்வதும், வெளியில் கிளர்ச்சி நடத்தப் போகிறார்கள்

[Sri C. N. Annadurai] [30th January 1961]

ஆகையால் இதைப் பற்றி சட்ட மன்றத்தில் விவாதிக்கக் கூடாது என்று சொல்லி விவாதத்தை ஒத்திப் போட்டு சட்ட மன்றம் தன்னுடைய கடமைகளிலிருந்து தவறிவிட, துரைத்தனத்தார் தூண்டுகோலாக ஆகிவிடுவார்கள் என்று அஞ்சுகிறேன். இதில் சர்க்காருக்குத் தயக்கம் இருக்க என்ன காரணம்? தமிழர்கள் இருக்கும் மாநிலத்திற்கு தமிழ்நாடு என்று பெயர் வைக்கத் தயங்குவதற்குக் காரணம் என்ன? (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம்: இப்போது அது பிரச்னை அல்ல.) ஒரு வார்த்தையில் சர்க்கார் கட்சித் தலைவர் தமிழ் நாடு என்று பெயர் வைக்கத் தான் போகிறோம் என்று சொல்லி விட்டால், எல்லோருடைய காதிலும் தேனை வார்த்ததற்குச் சமானமாக இருக்கும்—வாயிலே இல்லை யென்றாலும். எல்லோரும் வெகு ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கும்போது, இந்த விவாதத்தை ஒத்தி வைக்க வேண்டும் என்று சர்க்கார் கட்சித் தலைவர் அவர்கள் கேட்கிறார்களென்றால், அதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. பல மேல்நாடுகளுக்குச் சென்று சுற்றிக்கொண்டு வந்திருப்பவர், நிதி அமைச்சர் அவர்கள் இப்படி ஒரு தந்திரம் மேல் நாடுகளிலிருக்கிறது என்று தெரிந்துகொண்டு வந்து சொல்லுகிறாரோ என்று எண்ண நேரிடுகிறது. இத்தனை பொருட்செலவுக்குப் பிறகு இந்தத் தந்திரத்தைத் தான் கற்றுக்கொண்டு வந்திருக்கிறார் என்று சொன்னால், போய் வந்த செலவு அத்தனையும் வீணாகும். மிகச் சாதாரணமான தீர்மானத்தை—அடிப்படை உரிமை பெற வேண்டிய தீர்மானத்தை—இங்கே பேச அனுமதி தருவதுதான் அறநெறி என்று இந்த ஆட்சியாளர்களுக்குத் தெரிவித்துக்கொள்கிறேன்.

**Sri P. S. CHINNADURAI**: மதிப்பிற்குரிய சபாநாயகர் அவர்களே, இந்தத் தீர்மானத்தைப் பற்றிய விவாதத்தை சுதந்திரமான முறையிலே நடத்துவதற்கு உண்மையிலேயே வெளியே நடைபெறுகின்ற கிளர்ச்சி ஒருவகையில் நிர்ப்பந்தத்தை உண்டாக்குகிறது என்பதை உணர்கிறேன். தர்மசங்கடமான ஒரு நிலைமையை தமிழரசுக் கழகம் இப்போது ஏற்படுத்தியிருக்கிறது. ஒரு நாளைக்காவது போராட்டம் ஒத்தி வைக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்ட பிற்பாடுகூட, உடனே இந்தப் போராட்டத்தைத் துவக்கியிருப்பது அரசாங்கத்திற்கு ஒரு தர்ம சங்கடமான நிலையை ஏற்படுத்தி இருக்கிறது என்பதை நான் உணர்கிறேன். ஆயினும், அதே தர்மசங்கடமான ஒரு நிலைமையை சர்க்கார் கட்சித் தலைவர் அவர்களும் ஏற்படுத்த வேண்டாமென்று நான் மிகவும் மன்றாடி அவர்களை வேண்டிக்கொள்ள விரும்புகிறேன். அவர்கள்தான் ஒரு நாள்கூட ஒத்தி வைப்பதற்கு பொறுக்க மாட்டோம் என்று சொன்னாலும், அவர்கள்தான் கடமையிலே அளவிற்குத் தவறி விட்டார்கள் என்றாலும், நாமாவது நமது கடமையிலிருந்து தவறுமாறு இருக்கக்கூடாது என்று நான் கேட்டுக்கொள்கிறேன். இந்த சபையிலே இப்போது சர்க்கார் கொள்கையை அறிவிப்பதன் மூலம், கோடிக்கணக்கான மக்களுக்கு அந்த அறிவிப்பின் மூலம் மகிழ்ச்சி ஏற்படுமே தவிர, அதனால் உண்மையிலேயே சர்க்காருக்கு

30th January 1961] [Sri P. S. Chinnadurai]

பெருமைதான் ஏற்படுமே தவிர குறைவு ஒன்றும் ஏற்பட்டுவிடாது. இந்த சபையின் பெருமையும் அதனால் உயர்த்தப்படுமென்பதை நான் மிகவும் தாழ்மையுடன் தெரிவித்துக் கொள்கிறேன். நம்முடைய உணர்ச்சிகள் எவ்வகைப்பட்டதாக இருந்தபோதிலும், கிளர்ச்சியை கருத்தில் வைத்துக்கொண்டு நாம் செயல்படக் கூடாது என்று நினைக்கிறேன். ஆகவே, இந்தத் தீர்மானத்தின் மீது சர்க்கார் கருத்தை, கொள்கையை ஒத்திப் போடாமல், மனம் விட்டு மகாத்மா காந்தியின் நினைவைப்பற்றி எடுத்துக் கூறுகின்ற இந்த புனிதமான நாளிலே வெளியிடுவதற்கு முன் வரவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதனால் கோடிக்கணக்கான மக்கள் மகிழ்ச்சியடைவார்கள் என்பதையும் தெரிவித்துக்கொண்டு இந்த விவாதத்தைத் தொடர்ந்து அனுமதிக்க சர்க்கார் கட்சித் தலைவர் அனுமதி அளிக்க வேண்டுமென்று நான் மறுபடியும் மன்றாடிக் கேட்டுக்கொண்டு, என் பேச்சை முடித்துக்கொள்கிறேன்.

* Sri V. K. RAMASWAMY MUDALIYAR : கனம் சபாநாயகர் அவர்களே, கனம் அங்கத்தினர் ஸ்ரீ சின்னதுரை அவர்கள் கொடுத்த இந்தத் தீர்மானம் பல தடவைகள் இந்த சபை முன்பு கொண்டுவரப்பட்டிருக்கிறது. இப்பொழுது நினைத்துக்கொண்டு திடீரென்று கொண்டுவந்த தீர்மானமல்ல இது. ஆனால் இவ்வளவு நாளாக அந்தத் தீர்மானமானது அட்ஜேர்ன்மெண்ட் போடப்பட்டு, அதாவது தள்ளிவைத்துக் கொண்டே வந்திருக்கின்றோம். இதன் காரணமாக இதை ஒத்தி வைக்க வேண்டியதில்லை. ஆகையால், உடனே இதை விவாதத்திற்கு எடுத்துக்கொள்ள வேண்டுமென்பது என்னுடைய தாழ்மையான அபிப்பிராயம்.

Mr. SPEAKER : Rule 79 of the Assembly Rules reads as follows :—

'A motion that any meeting or business be adjourned or postponed or that the House pass on to the business next in order in the list of business may be moved at any time and without previous notice as a distinct question, but not so as to interrupt a speech. If the motion is carried, the metting or business shall, subject to the provisions of sub-rule (3) of rule 21, be adjourned or postponed accordingly, or if the motion carried be that the House pass on to the business next in order in the list of business the business then under discussion shall be considered to be disposed of . . .'

I would therefore like the Hon. the Leader of the House to tell me whether he wants this House to adjourn now or pass on to the next item in the Agenda.

The Hon. Sri C. SUBRAMANIAM : I have suggested that further consideration of the resoultion be adjourned. I thought that I made that clear.

[30th January 1961

SRI M. KALYANASUNDARAM : If the Hon. the Leader of the House insists that it should be decided only by a vote . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : If it is not agreed unanimously, it is for the Chair to decide.

MR. SPEAKER : Under Rule 79 of the Assembly Rules whatever motion the Hon. the Leader of the House moves, I have to put it to vote.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இதில் ஏதோ சர்க்கார் பலஹீனத்தையோ அல்லது தாமதத்தையோ ஒத்துக்கொள்ள வேண்டுமென்று யாரும் உண்மையிலேயே நினைக்க மாட்டார்கள் என்பதை நான் உணர்கிறேன். விவாதத்திற்காகத்தான் அவ்வாறு சொல்லப்படுகிறதே தவிர, உண்மையில் சர்க்கார் பலஹீனத்தை எடுத்துக் காட்டுவதற்கு இதிலே இடமேயில்லை என்பதை திட்டவட்டமாகத் தெரிவித்துக்கொள்கிறேன். இது உடனடியாக நாளைக்கே நடக்காவிட்டால், ஒரு பெரிய தீங்கு நேரிடப்போகிறது என்று சொன்னால், இதை மாற்றுவதற்கான சூழ்நிலையை உடனடியாக விவாதிக்க வேண்டுமென்று நானும் உங்களுடன் சேர்ந்து கொண்டு, அதற்காக வாதாடுவேன் என்பதிலே சந்தேகம் கிடையாது. இது யோசிக்க வேண்டிய விஷயம். அப்படி யோசிக்கும்போது, எந்த விதத்திலும் நம்மை பாதிக்காமல் இருக்கும் வகையில் ஒரு முடிவுக்கு வர வேண்டும். இன்றைக்கு காலையில் கூட 8 மணிக்கு விவாதித்து இதைப்பற்றி ஒரு திட்டவட்டமான முடிவெடுக்க வேண்டுமென்று நாம் இருந்தோம். ஆனால் வெளியே ஏற்பட்ட ஒரு நிகழ்ச்சியின் காரணமாக அவ்வாறு முடிவு எடுக்க முடியாத ஒரு சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன். அத்துடன் இன்றைக்கு மக்களுக்கும் ஒன்று தெரிய வேண்டும். இதுமாதிரி அவசியமல்லாமல் கிளர்ச்சிகள் நடைபெறுகின்ற காரணத்தினாலே, எந்தவிதமான காரியமும் நடைபெறாது, அதனால் தடைதான் ஏற்படுகிறது என்பதை மக்களும் உணரவேண்டும். இந்த கிளர்ச்சி ஏற்பட்டதால்தான் தங்கள் காரியம் நடந்தது என்று சொல்வதற்கோ அல்லது கிளர்ச்சியின் காரணமாக ஒன்றும் காரியம் நடக்கவில்லை என்று சொல்வதற்கும் இதிலிருந்து இடம் ஏற்படுகின்றது. அதன் காரணத்தினால்தான் நான்கூட, இந்த கேள்வி விவாதத்திற்கு அவசியமானால், பின்னால் யோசனை செய்யலாம் என்று சொன்னேன். அந்த அடிப்படையில்தான் ஸ்ரீ சின்னதுரை அவர்களையும் இன்றைக்கு இந்த விவாதத்தை ஒத்திப்போட வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவர்களும் இந்த அடிப்படையில் ஒத்திப்போடுவார்கள் என்று நம்புகிறேன். ஆகவே இன்றைக்கு நான் கேட்டுக்கொள்வது என்னவென்றால், இப்போது நம் சபை முன்புள்ள இந்தப் பிரச்னை உடனடியாக, அவசரமாக செய்யக்கூடிய காரியமல்ல, ஆர அமர அமர்ந்து யோசனை செய்யவேண்டும். ஆகவே இப் பிரச்சினையை பிப்ரவரி மாதம் 17-ஆம் தேதிக்கு மேல், 25 தேதிக்குள் விவாதத்

30th January 1961] [Sri C. Subramaniam]

திற்கு எடுத்துக்கொண்டு ஒரு முடிவுக்கு வரலாம். அதனால் எந்த விதமான நஷ்டமும் ஏற்பட்டுவிடாது என்று தெரிவித்துக் கொள்கிறேன். அப்படிச் செய்வதால் ஒரு நல்ல சூழ்நிலை ஏற்படு வதற்கும் வசதியாக இருக்கும் என்ற கருத்தினை சொல்லி இதை ஒத்திப்போட வேண்டுமென்று மீண்டும் கேட்டுக்கொள்கிறேன். எல்லாக் கட்சித் தலைவர்களும் இந்த யோசனையை ஆதரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டு இதை நான் பிரேரேபிக்கிறேன்.

SRI M. KALYANASUNDARAM : Sir, on a point of order. I want to know whether the Hon. the Leader of the House is only making an appeal or is moving a motion.

THE HON. SRI C. SUBRAMANIAM : I made that quite clear.

MR. SPEAKER : He made it clear that he wants this subject to be adjourned. If that is not agreed to, I would have to put it to vote. 10-30 a.m.

SRI M. KALYANASUNDARAM : If it is to be decided by a vote, then no useful purpose would be served. He is not prepared to listen to the unanimous appeal made by the Leaders of Opposition Parties. If he is insisting on the voting of the House then we are afraid no useful purpose will be served by our sitting here. I do not propose to take part in the voting. We will walk out of the House.

MR. SPEAKER : So far as the Chair is concerned, unless there is unanimity among all hon. Members, I have no option but to put it to vote.

THE HON. SRI C. SUBRAMANIAM : I have made a reasonable appeal to Opposition leaders and I do not think that they would lose anything by acceding to my request. I would again appeal to them not to make this a great issue and let us consider it in a leisurely and dispassionate manner after two weeks or 15 days. I would appeal to Sri Ramaswamy Mudaliyar, Sri Annadurai and Sri Kalyanasundaram to consider my suggestion.

SRI C. N. ANNADURAI : கனம் சபாநாயகர் அவர்களே, அமைச்சர் அவர்கள் திருப்பித் திருப்பி எங்களுடைய எண்ணத்தை மாற்றவேண்டும் என்று விரும்புவதால், திருப்பித் திருப்பி எங்களுடைய எண்ணத்தை வலியுறுத்தவேண்டியவர் களாக இருக்கிறோம். சர்க்கார் எந்த முடிவு எடுப்பதாக இருந் தாலும், இன்றைய விவாதம் அந்த முடிவு எடுப்பதை எந்த வகை யிலும் கெடுத்துவிடாது. கிளர்ச்சிக்கு மதிப்பு கொடுக்கக்கூடாது என்ற எண்ணத்திலே ஒரு ஜனநாயகக் கட்சியின் கொள்கை அமையுமானால், அந்த ஜனநாயகக் கட்சி உண்மையிலேயே ஜன நாயகத்தைப் போற்றவில்லை என்று வெளியிலே உள்ளவர்கள்

கருதுவார்கள். அதுமட்டுமல்ல, மெஜாரிட்டி எண்ணிக்கையில் முடிவு செய்வோம் என்று சொன்னால், அப்படிப்பட்ட முடிவுக்கு—தமிழ் நாடு என்று பெயரிடுவதுகூட எண்ணிக்கை பலத்தில் இருக்கும் என்று சொன்னால்—இந்த மன்றத்தில் இந்த விஷயம் பற்றி முடிவு எடுக்கப்படும் நேரத்தில் நாங்கள் வீற்றிருப்பது எங்களுக்கு வெட்கக் கேடு என்று நாங்கள் கருதுகிறோம். சர்க்கார் கட்சித் தலைவர் எங்களுடைய வேண்டுகோளை ஏற்றுக் கொண்டு தமிழ் நாடு பிரச்னையைப்பற்றி இங்கே பேசுவதற்கு உறுப்படமாட்டேன் என்று தெளிவுபட தெரிவித்தால், நாங்கள் இங்கே இருப்பதற்கு இல்லை, எழுந்து சென்று தமிழ் மக்களுக்கு பத்து பேர்களாவது இதற்காக இருக்கிறார்கள் என்ற நல்ல செய்தியையாகிலும் தெரிவிப்போம்.

SRI P. S. CHINNADURAI : தியாகிகளுக்கு அஞ்சலி செலுத்துவதற்காக ஒரு மணி நேரம் சபையை ஒத்திவைப்பதாக இருக்கிறது. ஆகவே, இப்பொழுது சபையை ஒத்திவைத்துவிட்டால் பிற்பாடு பார்த்துக்கொள்ளலாம்.

MR. SPEAKER : அதற்கு இன்னும் நேரம் இருக்கிறது. நீங்கள் ஏகமனதாக இல்லாவிட்டால் எனக்கு வேறு வழியில்லை. வோட்டுக்குத்தான் விடவேண்டும்.

THE HON. SRI C. SUBRAMANIAM : Sir, under rule 79 of Madras Assembly Rules, I move—

"That the discussion on the resolution of Sri P. S. Chinnadurai be postponed to a later date."

Leaders of Opposition parties and some Opposition Members staged a walk-out.

MR. SPEAKER : The question is—

"That the discussion on the resolution of Sri P. S. Chinnadurai be postponed to a later date."

The motion was put and carried and the discussion on the resolution was postponed.

MR. SPEAKER : The next two resolutions on the agenda are the resolution relating to the construction of a building for the Legislative Council standing in the name of Sri V. K. Kothandaraman and the resolution relating to the release of political prisoners standing in the name of Sri N. K. Palanisami. As the hon. Members are not in their seats, the resolutions are considered to have been withdrawn. As there is no other business, I adjourn the House to meet again at 8-30 a.m. tomorrow.

10-34 a.m.

**The House then adjourned.**

## IX.—PAPERS PLACED ON THE TABLE OF THE HOUSE

### A. *Statutory Rules and Orders*—Nil.

### B. *Reports, Notifications and other papers.*

* 42. *The Travancore-Cochin Agricultural Income-tax (Madras Amendment) Bill*, 1961.

* 43. *The Madras Inams (Assessment) Amendment Bill*, 1961.

* 44. *The Madras Estates (Abolition and Conversion into Ryotwari) Amendment Bill*, 1961.

* 45. *The Appropriation Bill*, 1961.

46. *Report and Proceedings of the Select Committee on the Madras State Housing Board Bill*, 1960 (*L.A. Bill No*. 31 of 1960).

* Sent by messenger on 28th January 1961.



## APPENDIX I.

[Vide answer to starred question No. 243 asked by Sri P. G. Manickam at the meeting of the Legislative Assembly held on 30th January 1961, page 73 supra.]

*Number of Express Stage Carriage routes to be opened during the year 1960-61.*

| *Name of the district.* | *Number of Express Stage Carriage routes to be opened during the year 1960–61.* | *Details of routes.* | *Proposals pending for conversion of ordinary buses into express services* | *Proposals pending for insotroduction of additional express buses* |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| Coimbatore - - - | 1 | Route between Coimbatore and Palani (via) Kinathukadavu, Pollachi, Gomangalampudur, Udamalpet and Madathukulam—Two buses. | .. | .. |
| Madurai - - - | 2 | 1 Madurai-Thenkasi (via) Thirumangalam, Kallupatti, Srivilliputhur, Rajapalayam and Sivagiri. | .. | . |
| | | 2 Madurai-Pollachi (via) Kodai Road, Sembatti, Oddanchatram and Palani. | .. | One route Madurai-Lower Camp. |
| North Arcot - - - | 1 | Route Pernambut to Madras (via) Gudiyatham, Pallikonda, Vellore, Arcot, Kaveripakkam and Sunkuvarchatram. | 1 Vellore to Tirupattur.<br>2 Vellore to Tiruvannamalai. | .<br>.. |
| Ramanathapuram - - | 2 | 1 Madurai to Mandapam (via) Manamadurai, Paramakudi, Ramnad, Uchipuli.<br>2 Madurai to Devakottai via Varichur, Sivaganga, Kaliarkoil and Sarugai. | 1 Madurai—Ramanathapuram. | .. |

| | | | | |
|---|---|---|---|---|
| Salem .. .. .. | 2 | 1 Salem to Tiruvannamalai .. .. .. | .. | .. |
| | | 2 Salem to Chidambaram .. .. .. | .. | .. |
| South Arcot .. .. .. | 1 | 1 Salem to Chidambaram .. .. .. | .. | .. |
| Tiruchirappalli .. .. .. | 2 | 1 Thirupattur to Tiruchirappalli (via) Kilasavalpatti, Tirumayam, Pudukottai and Keeranur. | .. | .. |
| | | 2 Thanjavur to Madurai (via) Gandharvakottai, Pudukottai, Thirupathur and Melur. | | |
| Tirunelveli .. .. .. | 1 | 1 Tuticorin to Madurai (via) Ettayapuram and Arruppukottai. | 1 Tirunelveli Junction Shencottah (via) Ambasamudram and Tenkasi. | 1 Tirunelveli Junction –Tiruchendur. |
| | | | 2 Tirunelveli Junction Tiruchendur (via) Srivaikundam. | 2 Tirunelveli Junction –Courtallam. |
| | | | 3 Tirunelveli Junction Puliangudi (via) Alankulam and Tenkasi. | |
| | | | 4 Tirunelveli Junction Srivilliputhur (via) Alangiapandiapuram, Sankarankoil, Rajapalayam. | |
| | | | 5 Tirunelveli Junction Tuticorin (via) Vallanad. | |
| | | | 6 Tirunelveli Junction Kovilpatti (via) Kayathar. | |
| | | | 7 Tirunelveli Junction Koilpatti (via) Eppoduvendand and Ettayapuram. | |

| Name of the district. | Number of Express Stage Carriage routes to be opened during the year 1960–61. | Details of routes. | Proposals pending for conversion of ordinary buses into express services. | Proposals pending for introduction of additional express buses. |
|---|---|---|---|---|
| (1) | (2) | (3) | (4) | (5) |
| Madras State Transport Department under permits to be issued by the State Transport Authority, Madras. | 9 | 1 Nagercoil to Madurai (via) Nanguneri, Tirunelveli, Palayamcottah, Koilpatti, Virudhunagar, Tirumangalam.<br>2 Tiruchirappalli to Tirunelveli (via) Manaparai, Dindigul, Kodaikanal Road, Madurai, Virudhunagar and Koilpatti.<br>3 Tiruchirappalli to Coimbatore (via) Kulittalai, Karur, Kangayam and Palladam.<br>4 Tiruchirappalli to Nagercoil (via) Viralimalai, Thuvarankurichi, Kottampatti, Melur, Madurai, Virudhunagar, Sattur, Koilpatti, Tirunelveli, Nanguneri and Valliyur.<br>5 Madras to Salem (via) Tambaram, Chingleput, Tindivanam, Villupuram, Ulundur, Kallakurichi and Attur.<br>6 Madras to Salem (via) Tambaram, Chingleput, Madurantakam, Tindivanam, Villupuram, Madapet, Tirukoilur, Kallakurichi and Attur.<br>7 Madras–Tiruchirappalli (via) Tambaram, Chingleput, Madurantakam, Tindivanam, Villupuram and Ulundurpet.<br>8 Madras–Tiruchirappalli (via) Tambaram, Chingleput, Tindivanam, Villupuram, Ulundur, Perambalur and Padalur<br>9 Tiruchirappalli to Nagercoil (via) Manaparai, Dindigul, Kodaikanal Road, Madurai, Aruppukottai, Ettayapuram, Kurukkuchalai, Tuticorin, Tirunelveli, Nanguneri and Valliyur. | .. | .. |

## APPENDIX II.

[Vide answer to starred question No. 247 asked by Sri M. A. B. Arumughasamy on behalf of Sri N. R. Thiagarajan] at the meeting of the Legislative Assembly held on 30th January 1961, page 76 supra]

*Statement showing districtwise particulars of loan amounts disbursed to co-operative societies under the various Co-operative Housing Schemes and the number of houses constructed from 1st April 1959 to 31st March 1960.*

| | Schemes. | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | M.I.G.H Scheme. | | L.I.G.H. Scheme. | | S.U.H. Scheme. | | S.I.H. Scheme. | | Rural Housing Scheme. | |
| Name of district | Amount of loan disbursed. | Number of houses constructed. | Amount of loan disbursed. | Number of houses constructed. | Amount of loan disbursed. | Number of houses constructed. | Amount of loan disbursed. | Number of houses constructed. | Amount of loan disbursed. | Number of houses constructed. |
| (1) | (2) | (3) | (4) | (5) | (6) | (7) | (8) | (9) | (10) | (11) |
| | RS. | | RS. | | RS. | | RS. | | RS. | |
| 1 North Arcot .. .. | 15,000 | .. | 1,43,000 | 22 | 1,00,000 | 17 | .. | .. | 12,400 | 2 |
| 2 South Arcot .. .. | | . | 85,000 | 17 | 7,500 | .. | .. | .. | 800 | 4 |
| 3 Chingleput .. .. | 19,000 | .. | 3,15,000 | 7 | 1,75,000 | 20 | .. | .. | 43,100 | 9 |
| 4 Coimbatore .. .. | 23,600 | .. | 1,10,000 | 10 | 7,49,000 | 11 | 61,252 | 10 | 31,360 | 4 |
| 5 Kanyakumari .. .. | . | .. | 40,000 | 5 | .. | .. | .. | .. | 5,000 | .. |
| 6 Madras .. .. | 1,07,500 | 3 | 4,30,000 | 151 | 23,76,100 | .. | .. | .. | .. | .. |
| 7 Madurai .. .. | 16,000 | .. | 3,50,000 | 19 | 2,45,000 | 17 | .. | .. | 75,000 | 11 |
| 8 The Nilgiris .. .. | .. | .. | 8,000 | .. | 20,000 | 6 | .. | .. | 26,600 | 7 |
| 9 Ramanathapuram .. | 96,000 | .. | 70,000 | .. | 55,000 | 22 | 1,44,072 | 50 | 19,270 | 13 |
| 10 Salem .. .. .. | 25,000 | .. | 1,25,000 | 25 | 59,500 | 5 | 70,070 | .. | 42,000 | 6 |
| 11 Thanjavur .. .. | 7,900 | .. | 45,000 | 6 | 33,900 | 7 | .. | .. | 45,000 | 2 |
| 12 Tirunelveli .. .. | .. | .. | 53,000 | 4 | 42,000 | 8 | .. | .. | 15,500 | 11 |
| 13 Tiruchirapalli .. .. | 7,50,000 | .. | 2,26,000 | 8 | 1,32,000 | .. | .. | .. | 33,800 | 4 |
| Total .. | 10,60,000 | 3 | 20,00,000 | 274 | 39,95,000 | 113 | 2,98,223 | 60 | 3,49,830 | 73 |

[30th January 1961

APPENDIX III.

[Vide answer to starred question No. 249 asked by Sri T. S. Ramaswami at the meeting of the Legislative Assembly held on 30th January 1961, page 78 supra.]

The Key Village is a compact area consisting of one village or a group of contiguous villages having a total population of about 500 cows of breeding age. It is selected in a breeding tract. About 16 bulls of known breeding value are located for each Block. All the other bulls not true to type in the area will be castrated or removed. The breeding programme will be carried out by bulls provided already and supplemented by Artificial Insemination. Each Key Village is expected to produce annually 100 bulls and in addition an equal number of improved heifers.

2. Thirty-seven Key Village Blocks have so far been established in this State during the First and Second Five-Year Plan periods. The following facilities are offered by the Key Village Centres :—

(1) A co-ordinated breeding policy will be the basis of the Plan.

(2) The provisions of the Livestock Improvement Act, 1958, will be extended to the Key Village area selected for intensive cattle development.

(3) All the animals in the area will be inoculated against all prevalent contagious diseases ; to effect economies in bulls and to spread, to widest extent possible, the superior germplasm available in the country.

(4) Artificial Insemination Centres will be established in suitable places and arrangements made to carry semen to Key Villages for insemination wherever possible and practicable.

(5) Observations will be maintained for purposes of assessing the annual or periodical improvement in the cattle of the area as a result of this work.

(6) Trying to help the breeder in his day-to-day problems of Animal Husbandry and carrying on educative propaganda regarding better methods of breeding, feeding, disease-control and management, gradually combining the breeders into a Co-operative Society. If a multipurpose society exists already, a section will be opened for purposes of Livestock Development.

(7) The animals will be brought into the Central Herd Books Scheme, when they will be registered births and deaths notified and changes of ownership recorded.

(8) Through the Co-operative Society the members will be helped to eliminate middlemen in the marketing of cattle and cattle products and to obtain a better price.

(9) Development of the available common grazing land ; propaganda in regard to controlled and rotational grazing ; growing of fodder crops ; preservation of fodder as silage or hay; Co-operative purchase of fodder, if necessary and of concentrates.

30th January 1961]

(10) Marketing out of male progeny for extension work, etc.

(11) Preparation of a plan for the systematic distribution at large of selected calves purchased from Key Villages.

(12) Investigation under village conditions on numerous aspects of Animal Husbandry like the suitability of particular breeds to particular localities; causes of degeneration in different areas; various problems of grading up of inferior cattle; cost of production under different conditions; management practices, etc.

APPENDIX IV.

[Vide answer to starred question No. 249 asked by Sri T. S. Ramaswami at the meeting of the Legislative Assembly held on 30th January 1961, page 80 supra.]

*Grants.*—The particulars about the sanction of grants are furnished below :—

Under the "Scheme for the grant of subsidy to private poultry breeders and associations" implemented during the Second Five-Year Plan, the Government are sanctioning a sum of Rs. 17,000 every year for the payment of subsidy to twenty private poultry breeders and associations at a rate not exceeding Rs. 850 each. So far 76 breeders and associations were subsidised under this scheme from 1956–57 to 1959–60. For the current year also, a sum of Rs. 17,000 has been sanctioned for the payment of subsidy for 20 breeders. The list showing the number of breeders selected for the grant of subsidy has not yet been finalized.

Apart from this, subsidies are also given in special cases to certain private poultry breeders, institutions, etc. Under this category, the following poultry farms have so far been subsidised by Government :—

(1) Poultry Farm run by Mrs. Annamma Varghese, Ambathurai, Madurai district.

(2) Poultry Farm run by the Procurator, Sacred Heart College, Shenbaganur, Madurai district.

(3) Poultry Farm run by Sri P. A. Ramaswamy Gounder, Mallur, Salem district.

(4) Poultry Farm at Sevasamajam for Boys and Girls, Adyar.

(5) Poultry Farm at Service Home, Tambaram.

*Loan.*—No loans are sanctioned to poultry breeders and associations by the Animal Husbandry Department. However, the Block Development Officers may sanction a maximum of Rs. 300 for poultry farming in Community Development and National Extension Service areas, under the rules governing the grant of loans under Thakkavi Manual.

[30th January 1961

## Appendix V.

[Vide answer to starred question No. 264 asked by Sri T. S. Ramaswami at the meeting of the Legislative Assembly held on 30th January 1961, page 86 supra].

*Statement showing the number of pairs of plough bulls supplied to Scheduled Castes during the last three years under the Agricultural Subsidy Schemes for Scheduled Castes.*

| | 1957–58. Number of bulls (pair). | 1958–59. Number of bulls (pair). | 1959–60. Number of bulls (pair). |
|---|---|---|---|
| 1 Chingleput .. .. .. .. | 400 | 400 | 359 |
| 2 South Arcot .. .. .. .. | 400 | 523 | 356 |
| 3 North Arcot .. .. .. .. | 400 | 403 | 396 |
| 4 Salem .. .. .. .. .. | 477 | 484 | 361 |
| 5 Thanjavur .. .. .. .. | 522 | 477 | 357 |
| 6 Tiruchirappalli .. .. .. .. | 440 | 370 | 355 |
| 7 Ramanathapuram .. .. .. | 393 | 421 | 355 |
| 8 Coimbatore .. .. .. .. | 477 | 497 | 355 |
| 9 Tirunelveli .. .. .. .. | 424 | 430 | 370 |
| 10 Kanyakumari .. .. .. .. | 100 | 103 | 367 |
| 11 Madurai .. .. .. .. .. | 440 | 440 | 355 |
| 12 The Nilgiris .. .. .. .. | .. | .. | .. |



